வெண்டாமரை—மலர்—௧.



உ

கடவுள் துணை.

# காதம்பரி சங்கிரகம்.

கும்பகோணம்
டவுன் ஹைஸ்கூல்—த்
ஊ. சா. வெங்கட
எழுதியது.





கும்பகோணத்தை அடுத்த கல்லூர்க்
கலைமகள் கல்விக் கழகத்தார்
வெளியிட்டது.

1920

[பதிவு செய்தது.] [விலை அணா 5.

உ

கடவுள் துணை.

# உரிமை யுரை.

---

பாணனார் உரையின் பண்பினைப் படித்து
மாணவர் இன்புறு மாறுநன் மொழியாம்
தண்டமிழ் மொழியிற் றந்தகா தம்பரி
கதையின் சுருக்கம் ஆகும்இந் நூலைக்
கடல்புடை உடுத்த காசினி இதனில்
துன்னினர் எவர்க்குஞ் சோறுடைத் தாரணை
ஔவையின் அருளார் செவ்விய மொழியிற்
சேர்த்துச் சொல்லும் பேற்றைப் பெற்றுயர்
தொல்சீர் பரவிய சோழநன் னாட்டிற்
சொல்லார் கழனிக் கல்லூர் இதனில்
நல்லோர் வருநான் மறையோர் மரபார்
ஜோதிர் மயம்எனுந் தொல்குடிப் பிறந்த
முத்துசா மிப்பேர் உத்தமன் சுதனா
வந்தவன் அன்றியும் மாபுக் கேற்பக்
கற்றாய்ந் தொழுகிச் சுற்றந் தாங்கி
இன்புற் றன்போ டெண்டெமக் காவான்
கலைமகள் கல்விக் கழகம் இதனைக்
கண்டவன் அருளருக் கொண்ட கணேசப்
பேரார் மறையோன் பெருமைக்கு
ஏரார் அறிதுறி ஆக்கினம் இனிதே.

கழகத்தார்.

கடவுள் துணை.

# பதிப்புரை.

---

இஃது, கலைமகள் கல்விக் கழகம் எனப் பெயரிய எங்களது சங்கத்தினின்றும் வெளிவரும் மூன்றாவது பிரசுரமாவது. இதனை வெளியிட்டுக்கொள்ளுமாறு எங்களுக்கு அனுமதி அளித்த ஆக்கியோனும் எங்கள் கழகத்தலைவரும் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய **ப்ரும்மஸ்ரீ உ. சா. வேங்கடராம ஐயர் அவர்கள்** மாட்டும், இதற்கு ஓர் முகவுரையை வரைந்துதவிய **சென்னை ஸ்ரீமான் என். கிருஷ்ணராவ் (பி.ஏ. எல்.டி.) அவர்கள்** மாட்டும் நாங்கள் எங்களது மனமார்ந்த நன்றியறிதலைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

இப் புத்தகத்தாற் கிடைக்கும் ஊதியம் எங்கள் கழகத்தை நாட்டிய **ஸ்ரீமான் ஜோதிர்மயம், க. இராஜகோபால ஐயர் அவர்கள்** செய்யும் பொருளுதவியால் நடைபெற்றுவரும் **ஜோதிர்மயம், ம. கணேச இலவச ஆரம்ப பாடசாலையின்** மூலதனத்திற்குச் சேருமாதலால் இம்முயற்சி எங்களுக்குப் போதிய உதவியாமாறு ஆதரவளிக்க வித்தை இலாகா அதிகாரிகளையும் பொதுஜனங்களையும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

எங்களது நோக்கத்தைப் பூர்த்திசெய்தருளுமாறு கலைமகளார் இணையடிகளை இறைஞ்சுகின்றோம்.

கலைமகள் கல்விக் கழகம்
கல்லூர்,
10—8—20.

**கழகத்தார்.**

உ

கடவுள் துணை.

# முகவுரை.

---

நமது புண்ணிய பூமியாகிய பாரதகண்டத்திற்குக் கண்போன்று ஒளிர்வதும், தென்னிந்தியாவிற் சரஸ்வதியின் பீடமாய் விளங்குவதும் ஆகிய கும்பகோணத்திற்கு அருகாமையில் உள்ளது கல்லூர் என்னும்சிறிய கிராமம். அங்கு சற்குணங்களுக்கோர் உறைவிடமாய், அடக்கத்தின் உருவமாய்ச் சுற்றத்தாரும், நட்பினரும், மற்றவரும் மெச்சும் வண்ணமும், **வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்** என்ற திருவாக்குக்கு இலக்காகவும் வாழ்ந்து காலஞ்சென்ற **ஸ்ரீமான் ஜோதிர்மயம். மு. கணேச ஐயர்** அவர்களது பெயர் மறக்கப்படா வண்ணம் அதற்கு ஒரு ஞாபகச்சின்னம் ஏற்படுவது விரும்பத்தக்கதும் அவசியமானதும் ஆகும்.

இதனை உணர்ந்தே காலஞ்சென்ற ஐயர் அவர்களின் குமாரர் **ஸ்ரீமான். ஜோ. க. இராஜகோபால ஐயர் அவர்கள்** தமது அருமைத் தந்தையாரின் ஞாபகார்த்தமாக அந்தக் கல்லூரிலே தமது தந்தையார் பெயரால் ஓர் இலவச **ஆரம்ப பாடசாலையை** ஸ்தாபித்து **நடத்திவருகிறார்.** அகஇருளையும், புறஇருளையும் போக்கக்கூடிய கல்வியைப் போதிப்பதைவிட மேலான தர்மமும் உளதோ? அப்பாடசாலையைப் பலவிதத்திலும் வளரச்செய்வதே அவருடைய முக்கிய நோக்கமாய் இருக்கிறபடியால், அதற்குத் துணையாய் இருக்கும் பொருட்டு இப்புத்தகத்தை வெளியிட்டு இதனால் வரும் ஊதியத்தை அப்பாடசாலையின் க்ஷேமநிதிக்கு உபயோகப் படுத்த எண்ணியிருக்கிறார். அவரது எண்ணம் இனிது நிறைவேறுமாறு சர்வேசுவரன் கிருபைபுரிவாராக. **தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தாற் காணப்படும்** என்றது பொய்யாமொழி அல்லவா?

கல்வியின் அபிவிருத்தியை உத்தேசித்தும், தம்மினும் கீழ்ப்பட்டார் நிலைமையைச் சீர்ப்படுத்த இரக்கங்கொண்டும் தந்நலம் பாராட்

டாது இப்புஸ்தகத்தை எழுதி உதவிய ஸ்ரீமான்: பண்டித **ஸை. சா. வேங்கடராமஐயர்** அவர்களுடைய செய்கை மெச்சத்தக்கது. காதம்பரியாகிய சிறந்த பெரிய கதையினைப் பொருட்சுவை அமைய இனிய தமிழ்நடையில் இச்சிறு புத்தகத்தில் எழுதித்தந்ததற்காக அவருக்குத் தமிழுலகம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

மற்று, இது, பொருத்தமுள்ள மேற்கோள்கள் நிறைந்து சொற்சுவை சாலப்பொருந்தி இருத்தலால் இந்நாட்டில் நடைபெறும் பரீக்ஷைகளுக்குத் தகுந்த ஒரு பாடபுத்தகமாகவும் இருக்கிறது.

எனது நண்பர் கணேச ஐயர் அவர்களது பிரியாற்றாமையைத் தணிக்கவும், நான் அவர்களிடத்து வைத்திருந்த நன்மதிப்பையும் மரியாதையையும் வெளிப்படுத்தி எனது கடமையைச்செலுத்தவும் எனக்குச் சமயம் வாய்க்கச்செய்த ஸ்ரீமான். மேஜர். க. இராஜகோபால ஐயர் அவர்களுக்கும், ஸ்ரீமான் ஸை. சா. வேங்கடராம ஐயர் அவர்களுக்கும் நான் கடமைப்பட்டவனாக இருக்கிறேன்.

சென்னை,<br>6—8—1920.

N. KRISHNA RAO, B.A., L.T.

கடவுள் துணை.

# முன்னுரை.

---

அடியேன் இதன் முதல்நூலாகிய காதம்பரி மூலத்தைப் படித்து அதன் வருணனைகளில் ஈடுபடுவதுண்டு. அதனால் அடியேன் மேற்கொண்டிருக்கும் தண்டமிழ்த்தொண்டின் பகுதியில் இதனையுஞ் சேர்க்க எண்ணித் தற்காலத்திற் கலாசாலை கல்லூரி ஆகியவற்றிற் பயிலும் மாணவர்கள் கற்றற்குப் பொருந்துமாறு முதல் நூலின் நடைபோக்கு முதலாயவற்றிற் சிறிது மாற்றியும், இன்றியமையாத பலமேற்கோள்களை இடங்களுக்கேற்ப நமது தண்டமிழ்ச் சான்றோர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறள் முதலிய நூல்களிலிருந்தும் முதல் நூலிலிருந்தும் காட்டியும் அடியேனது சிற்றறிவுக்கெட்டிய அளவு எழுதினேன்.

நிற்க, அடியேன்,

"வாண ஞமுயர் மறையவன் சொற்கரை யெல்லை
காண லாய்முடி வற்றகா தம்பரிக் கடலைப்
பேண லாமெனும் வாசகம் பித்தருஞ் சொல்லார்
நாணி லாதிது நான்முயல் கின்றது நகையே.

சொன்ன வாசக மேசொலுஞ் சுகங்கள்சா ரிகைகள்
என்ன வாணனி தியம்புமா றியம்புத லுற்றேன்
அன்ன வாய்த்தெளி யாதன வாயவென் புன்சொல்
தன்னை நாவல ரானவர் தாமிக ழாரே.

பாற்கடற் சென்றபூசை பாலின்மே லாசைவைத்து
மேற்கொள வரினுமெல்லா வெள்ளமுங் கொள்ளவற்றோ
பாற்கட லனையகாதம் பரிக்கடற் பரப்பிலாசை
மேற்கொளு மென்றனெஞ்சம் வேண்டுவ கொள்ளுமன்றே."

என்ற முதல் நூலின் அவையடக்கச் செய்யுட்களின் பொருளை உணர்ந்து எனது சிறுமையை நோக்கிப் பயங்கொண்டேனாயினும்

ஆசைமேலீட்டால் வெளியிடத்துணிந்தேன். அதுபற்றித் தமிழுலகம் அடியேனை மன்னித்தருள்வதாக.

இதனைக் கையெழுத்துப் பிரதியிலும் அச்சியற்றும்பொழுதும் பன்முறை பார்த்துச் சீர்திருத்தித்தந்த இக்கர் ரேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும், அடியேனது நட்பினரும் ஆகிய ப்ரும்மஸ்ரீ பி. ஸ்ரீநிவாஸ ஐயர் அவர்கள் உதவியை அடியேன் என்றும் மறவேன்.

நமது தண்டமிழ்த்தாய் காலத்திற்கேற்றவாறு சிறப்பிக்கப் பெறல்வேண்டும் என்ற அடியேனது உள்ளக்கருத்தை முற்றுவிக்க எண்ணிய திருவருளின் செயலோ என்று அடியேன் எண்ணுமாறு இச்சிறுநூலைப் பதிப்பித்து வெளியிட முன்வந்த நல்லூர் ஸ்ரீமான் ஜோதிர்மயம் கணேச இராஜகோபால ஐயர் அவர்கள் எல்லா நலங்களையும் மேன்மேலும் பெற்று நோயற்ற உடம்பினராய் இனிது வாழ்ந்து வருமாறு அருள்புரிய எல்லாம்வல்ல இறைவனைப் பன்முறையும் இறைஞ்சுகின்றேன்.

நாராயணவிலாசம்,
கும்பகோணம்,
1—8—20.

இங்ஙனம்,
உ.வெ. சா வேங்கடராம ஐயன்,
தண்டமிழ்த்தொண்டன்.

உ.

கடவுள் துணை.

# தமிழ்த் தெய்வ வணக்கம்.

---

மறைமுதற் கிளந்த வாயான்
　　மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
　　இலக்கணஞ் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை
　　அனைத்தும்வென் றரியத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
　　உள்நினைந் தேத்தல் செய்வாம்.

கடவுள் துணை.

# காதம்பரி சங்கிரகம்.

வடக்கே இமய வரையையும், கிழக்கும் தெற்கும் மேற்கும் வாரிதியையும் வரம்பாகக்கொண்டது நமது வளம்பொருந்திய பாரதபூமி. அதில் நாடா வளத்தினையுடையதும், அறம்தழுவிப் பெருகுபதி அனைத்தினுக்கும் ஆலயம் ஆம் எனச்சிறப்பிக்கப் பெற்றதும் ஆகிய அவந்தி எனப்பெயரிய ஒரு நாடுளது. அந்த நாட்டிற்கு முன்னொரு காலத்திலே

திசைஅளந்த வீதிகளும் திருஅளந்த
 மாளிகையின் திரளும் தேவர்
மிசைஅளந்த கோபுராசி களும்மலர்த்
 திருஅனைய விபுத மாதர்
நசைஅளந்து விளையாடும் நடமன்று செய்
 குன்றுகளும் நிறைந்தோர் வண்டின்
இசைஅளந்த சோலைகளும் எண்இறந்த திசைகள்
 எல்லாம் இலங்கித் தோன்றும்

அத்தகைய சிறப்புடைத்தாய் அறநெறிக்கோர் தாபரமாய் அறத்தின் வேராய்ச் சத்தியத்தின் சகோதரமாய்த் தானமே தொழிலாகித் தவத்தின் கண்ணும் மெய்த்திருவாழ் தாமரையாய் விண்ணுலகு மண்ணுலகாம் மேம்பாடொன்றிப் பொலிந்து ஓங்கும் உஜ்ஜயினி என்னும் நகரமானது தலைமைப்பட்டணமாக இருந்தது. அது சிப்ரை என்ற நதியினால் சூழப்பெற்று [illegible] நான்குவகை அரண்களையும் ஒருங்கே கொண்டது.

இத்தகைய சிறப்புக்கள் பொருந்திய பட்டணத்திலிருந்து அந்த அவந்திதேசத்தைத் தாராபீடன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் ஆண்டுவந்தான்.

அவன் பல கலைகளினும் ஆய்ந்த அறிவு வாய்ந்தவன்; அன்பு நிறைந்த மனத்தினன்; தன்னுயிரினும் மன்னுயிரை உயர்வாகமதிக்கும் மாண்பினன்; நூல்களிற் கூறியாங்கு நீதிநெறியைக் கைக்கொள்வதிற் கைதேர்ந்தவன்; எத்தகைய இடிக்கண்களுற்றாலும் அவற்றை நகுதலால் அடுத்தூர்ந்து இடிக்கும் ஆற்றலுள்ளவன்; ஊக்கத்திற்கும் உண்மைக்கும் உறைவிடமானவன்.

அவ்வளவு மேன்மைவாய்ந்த அரசனுக்கு அவனினும் பன்மடங்கு அதிகமான கல்வி அறிவு ஒழுக்கம் முதலாய உத்தமகுணங்களும் உறுதியுடைமையும் உள்ளவரும், எதையும் முன்னதாகவே உணரும் நுண்ணறிவு வாய்ந்தவரும், உத்தம மந்திரிக்குவேண்டிய குணங்களனைத்தும் ஒருங்கு திரண்டு ஓருருவெடுத்து வந்தாற்போன்றவரும் ஆகிய சுகநாசர் என்ற பெயரினையுடைய ஓர் அந்தணர் அமைச்சராக இருந்தனர்.

இத்தகைய சிறப்புக்களையுடைய அரசனும் அமைச்சரும் ஒன்றுகூடித் தீர ஆலோசித்துச் செய்யும் ஆட்சியினால் மகிழ்வடைந்த குடிகள், அவ்வரசனைக் கடவுளாகவே கருதினார்கள்; அவனது புகழைக் கூறுவதிலும் அதனைக் கேட்பதிலுமே தங்களது காலத்தைக் கழித்தார்கள்.

அவ்வரசனுக்கு மஹாலட்சுமியின் அம்சாவதாரமோ என்று ஐயங்கொள்ளுமாறு அவ்வளவு அழகும்

குணமும் வாய்ந்தவளும், அருந்ததியன்ன அப்பெருங் கற்புள்ளவளும் ஆகிய விலாஸவதி எனப் பெயர்பூண்ட ஒரு மஹிஷி இருந்தனள். அவள் கல்வி அறிவு ஒழுக்கங்களிலும், பழக்க வழக்கங்களிலும் மன்னனுக்குச் சிறிதும் பின்னிடாதவளாயிருந்து அவனது நிழலைப் போலவே அவனைப் பின்பற்றி ஒழுகிவந்தனள்.

இவ்வளவு பேரறிவும் பெருங்குணமும் வாய்ந்த அவர்களுக்கு இம்மை மறுமைகளில் இன்பத்தைத் தரும் மகப்பேறில்லாதது ஒரு பெருங்குறையாக இருந்தது.

இன்னணம் நாள் பல செல்ல, ஒருநாள், மன்னனுக்கு மகப்பேறில்லாக் குறை நினைவிற்கு வந்தது. அந்நினைவு வந்ததும் அவன் பெரிதும் மனமழிந்தவனாகிப் பின்னர் ஒருவகையாகத் தேறுதலடைந்தான். இவ்வாறே அரசனுக்கு அது பலமுறைகள் நினைவிற்கு வருவதும் மறைவதுமாகவே நிகழ்ந்துவந்தது. பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த மக்கட்பேறல்ல பிற என்பது மறைமொழி அல்லவா?

இங்ஙனமாக, ஒருநாள் அரசன், தனது மஹிஷியின் அந்தப்புரத்திற்குச் சென்றான்: அங்கே விலாஸவதி, தன்னை ஆடை அணிகளால் அலங்கரித்துக் கொள்ளாது அழுக்கடைந்த மேனியுடன்

கையில் வீழ்ந்த பொலமும் கண்ணினீர்
மைய வீழ்ந்த னொய்ந்தபட் டாடையும்
மெய்யில் வீழ்ந்த வியாகுல சோகமும்

கொண்டு பெரிதும் வருந்தினவளாகி அழுத கண்ணீரோடு தனித்து ஒரு மஞ்சத்தின்மீது உட்கார்ந்திருக்கக் கண்டான்; காரணம் இன்னதென்பதை அறிந்து

கொள்ள அவள் இருக்கும் இடத்திற்கு வந்தான். மறைவிலிருந்த தோழிமார் அரசன் வருவதை அறிந்து அறிவுறுத்தலும் மஹிஷி எதிர்கொண்டுவர எழுந்தனள்; அதன்முன் அரசன் அவளை ஆற்றுகின்றான்:

'புத்திரன் பதுமராகம் புத்திற் புராதனிப்பான்
பத்திரனும் ஆணையினால் புத்திரப்பேறில்லாதார்
உத்தமலோகம்பெறார்.'

என்று மகாபாரதம் உரைக்கும் வேதியர்கள் சொல்வதைக் கேட்டுத் தன்னைப்போல மஹிஷியும் மகப்பேற்றைக்கருதி வருந்துகிறாள் என்பதை மசரிகை என்னும் அடைப்பக்காரி உரைத்த உணர்ந்தான்: சற்றே மனந்தளர்ந்து பின்னர்த்தேறினான்; அப்பால் மஹிஷியை நோக்கி "மங்கை,

'மெல்லவே நோக்கிக் கண்மலர் புதல்வன்
மேவிய சிரிவெருட் டுகையால்
பல்லிலா எயிறு மையவே தோன்றப்
பழுதற நகைக்கும் அந் நகைகண்டு
அல்லலா கியஎன் துயரெலாம் மாறி
அங்ஙனே நீ அருகிருப்ப
மல்லுலா வியஎன் தோள்கள் பூரித்து
மனம்மகிழ்ந் தென்றுநான் வாழ்வேன்.

புழுதியார் அழகு பொலிந்தபொன் மேனிப்
புதல்வன்என் நெஞ்சம்என் கண்ணும்
தழுவியே பின்பு செல்லமுன் றிலிலே
தவழுவ தென்றுநான் காண்பேன்
வழுவிலாப் பளிக்குச் சுவர்ப்புறம் நின்ற
மான்நிழல் உள்வர அதுகண்டு
அழுது தான் பிடிக்க அதனுடன் உழலும்
அவ்அழகு என்றுநான் காண்பேன்.'

என்று இங்ஙனம் யாம் வருந்துவதிற் பயனென்னை? உறற்பால நீக்கல் உறுவர்க்கு மாகாது என்பது உறுதியுரை

யன்றோ? புத்திரப்பேறடையும் பூர்வபுண்ணியம் நமக்கிருக்குமாயின் அதனைத் தடுக்கவல்லவர் யாவரிருக்கின்றனர்? அது மற்றொன்று சூழினும் தான் முந்துறும் வன்மையினை வாய்ந்ததன்றோ? ஆதலின், நீ, இனி இம்மகப்பேற்றைப்பற்றிய கவலையை விட்டுவிட்டு முன்னிலும் அதிகமாக ஆசாரியர்களிடத்திலும் தெய்வத்தினிடத்திலும் முனிவர்களிடத்திலும் அன்பினையும் ஆராதனங்களையும் இடைவிடாது செய்துவருவாயாக. முயற்சியின் அளவிற்குத் தக்க கூலியைக்கொடுப்பதில் தெய்வம் ஒருநாளும் பின்வாங்குவதில்லை. எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார், திண்ணியராகப் பெறின் என்பது முதுமொழியல்லவா? நிற்க, யானும் மகப்பேற்றைப் பெறவில்லையே என்று உன்னைப்போல வருந்திக் கொண்டிருக்கின்றேன்; இச்சமயம் எனக்குற்ற அவ்வருத்தத்தை உன்னிடம்வந்து போக்கிக் கொள்ளலாம் என்றே வந்தேன்; நமக்கு மகப்பேறில்லாமற் போகாது: யான் கூறிய விஷயங்களிலே நீ இனிக்கவனமாயிருந்து வருவாயாக" என்றுகூறித் தேற்றித் தனது மாளிகைக்குச் சென்றான். மஹிஷியும் அன்று முதலாகக் கவலையுற்றுத் துக்கத்தோடிருப்பதை நீக்கி அரசனது உத்தரவின் வண்ணமே அனைத்தையும் இனிது நடத்திவந்தாள்.

இங்ஙனம் சின்னாட்செல்ல, அரசன் ஒருநாள் இரவின் இறுதிக்காலத்தே தனது மஹிஷியின் வாய்க்குள் ஒரு பூரணசந்திரன் புகுந்துகொண்டதாகக் கனவுகண்டு விழித்தான்; அக்கணமே சுகநாதனை அழைத்துக் கனவைக்கூறிப் பயனைக்கேட்டான்; அவரும் அரசனை நோக்கி "ஆண்டவரே, நமக்கும்

நம்முடைய குடிகளுக்குள்ள அந்தப் பெரிய குறை
யானது நீங்கப்போகின்றது. நானும் மிகச்சாந்தமான
வெள்ளுடைதரித்த வேதியர் ஒருவர் எனது மனைவி
மனோரமையின் மடியிலே ஒருமலர்ந்த வெண்டாமரை
மலரை வைத்ததாகக் கனவுகண்டு விழித்தேன்.
இவை இனி நமக்கு வரஇருக்கும் புத்திரப்பேறுகளைத்
தெரிவிக்கும் நற்சகுனங்கள். சகுனம் செய்வதைத்
தாயாரும் செய்யார் என்பதைத் தாங்கள் கற்றுணர்
வீர்களன்றோ? ஆதலின் மகப்பேற்றினைக் கருதி
அடையும் மனக்கவலையை இனித் தாங்கள் விடுவீர்
களாக" என்று கூறினார். பொழுதும் விடிந்தது.
இந்த நற்செய்திகளை விலாஸவதிக்கும் மனோரமைக்
கும் தெரிவித்து அவர்களையும் மகிழ்வித்தனர்.

இவ்வாறு சிலபகல்செல்ல, ஒருநாள், ஊழியக்காரி
களுள்ளே தலைவியான குலவர்த்தனை என்பாள் அரச
னிடம் அரசி கருவுற்றிருப்பதைத் தெரிவித்தாள்.
மனோரமை கருத்தரித்துள்ளாள் என்பதும் அறியலா
யிற்று. மாதங்களும் நிரம்பின. கருவுயிர்க்குங்கால
மும் வந்தது பல மருத்துவத் தாதிகளும் சோதிடர்
களும் உள்ளும்புறமுமாக இரண்டிடங்களிலும் நிறைந்
திருந்தனர். நல்ல சுபமுகூர்த்தத்திலே அரசி ஓர்
ஆண்மகவைப் பெற்றனள். அந்த நற்செய்தியைக்
கேட்டஅரசன் சுகநாதனுடன் ஓடிச்சென்று குழந்
தையின் அழகைக்கண்டு அகமகிழ்ந்தான் சுகநாத
னும் மிகமகிழ்ந்தவராகி அரசனை நோக்கி "எம் இறை
வரே, தமது பாலகன் இந்த உலகம்முழுவதையும் ஒரு
குடையின்கீழ் ஆளப்போகிறான்; அவனிடத்திலே சக்
கரவர்த்தி ஆவதற்குரிய பல குறிகள் காணப்படுகின்

றன: பாருங்கள்" என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே அவ்விடத்திற்கு மங்களன் என்பான் ஒரு தூதுவன் வந்து அவர்களை நோக்கி "ஐயன்மீர், மனோரமா தேவியார் ஓர் ஆண்மகவைப் பெற்றனர்." என்ற பிறிதொரு நற்செய்தியைத் தெரிவித்தான். அங்கிருந்தபடியே அரசரும் அமைச்சரும் மனோரமா தேவி கருவுயிர்த்திருக்கும் இடத்திற்குச் சென்றனர்; புத்திரோற்சவம் இரண்டையும் வெகு சிறப்பாகக் கொண்டாடிப் பலவகைத் தானங்களைச் செய்தனர். பத்துநாட்களும் இனிது கடந்தன. அரசகுமாரனுக்குச் சந்திராபீடன் என்றும், அமைச்ச புத்திரனுக்கு வைசம்பாயனன் என்றும் பெயர்கள் இடப்பெற்றன.

அரசனும் அமைச்சரும் தங்களுடைய குழந்தைகள் குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், மழலையாடியும் குதலைமொழிந்தும், சிறுதேர் உருட்டியும் சிற்றில் சிதைத்தும் விளையாடுவதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தனர். ஐந்தாம் வயதும் முடிந்தது. அன்னார், தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தியிருப்பச்செயல் என்ற முதுரையை அறிந்துள்ளார் ஆதலினாலே, உடனே அந்த இளங்குமாரர்களுக்கெனத் தனியே ஓரிடத்திலே ஒரு கல்விச்சாலையைக் கட்டி முடித்தனர்; தக்க ஆசிரியன்மார்களை ஆராய்ந்தமைத்தனர்; சந்திராபீடனையும் வைசம்பாயனனையும் அவர்களிடம் ஒப்புவித்தனர்.

சொல்வேதம் ஆகமநூல் சோதிடநூல் [illegible] துரகநன்னூல்
வில்வேதம் குஞ்சரநூல் மந்திரநூல் [illegible]
விளங்கு சோதிக்

சல்லிய தந்த்ரம் யந்த்ரநூல் தருமநூல் களவுநூல்
காம ராசன்
நல்வேதம் [illegible] நூல் [illegible] நூல் நாடகநூல்
இராக [illegible]
சுழல்முதலாய் தொன்றுதொற்றொட்டாயுதங்கள் யாழ்முதலாம்
தந்திரா [illegible]
[illegible] அலை [illegible] வாத்தியங்கள் [illegible] கவிதைத்தல்
இந்த்ர ஜாலம்
[illegible] வில் ஆ [illegible] சரித்திரங்கள் புராணங்கள்
பதினென்பாஷை
முனிவரில் ஆ [illegible] புத்தொழுக்கல்
முதலாம் [illegible]
வி [illegible] த்தை [illegible] அருந்தல் ருசித்தல் [illegible]
பிறேத [illegible]

ஆகிய சகல சாஸ்திரங்களையும் ஆசிரியன்மார்களது உபதேசத்தால் வைசம்பாயனனுடனே சந்திராபீடன் வியக்கிறிபடக் கற்றுத் தேர்ந்தவனானன். இவ்வாறு பத்துவருஷ காலங்கள் சென்றன. பாலிய முதலாகப் பிறப்பிலும் வளர்ப்பிலும் பழக்க வழக்கங்களிலும் ஒன்றுபட்டிருந்தாராதலிற் சந்திராபீட வைசம்பாயனர்களுடைய மனம் மொழி செயல் இவற்றுள் சிறிதும் வேறுபாடு காண்பது அரிதாக இருந்தது. ஆனால், வைசம்பாயனனிலும் சந்திராபீடன் சிறிது தேகவன்மையை மாத்திரம் அதிகமாகப்பெற்றிருந்தான். இருவரும் ஒருவரையொருவர் பிரிந்ததேயில்லை. உயிரும் உடலும் போலவே வளர்ந்துவந்தனர்.

இங்கிலையில், தாராபீடன் சுகநாசரது ஆலோசனையின்மேல் வலாஹகன் என்ற தனது சேனைத்தலைவனை விளித்துக் கற்பனைவரைறைக் கசடறக்கற்றுப் பூர்த்தி

செய்து அதற்குத்தக இருப்பவனுக்கும் தனது மகன் சந்திராபீடனை அழைத்து வருமாறு ஏவினன்; அவ னும் அங்ஙனமே சென்றனன்; சந்திராபீடனுக்குறுகி அரசன் ஆஞ்ஞையை விளம்பினன்.

அப்பால், சந்திராபீடன் ஆசாரியர்களுடைய அடிகளை வணங்கினன்; அவர்களாற் பெரிதும் ஆசீர் வாதம் செய்யப்பெற்றதோடு அரசனிடம் செல்வதற் கான அனுமதியையும் பெற்றான்; அரசனால் அனுப் பப்பெற்றிருந்த இந்திராயுதம் என்ற பெயரினையுடைய குதிரையின் மீதில் ஏறிக்கொண்டான். வைசம்பாயன னும் அவ்வாறேசெய்து அனுமதிபெற்றுத் தனது குதி ரையின்மேல் ஏறிக்கொண்டான். இருவரையும் அங் குள்ளார் வாழ்த்தி அனுப்பினார்.

இவ்வாறு புறப்பட்ட சந்திராபீடன், வைசம்பா யனனுடனே பட்டணத்தைக் குறுகுதலும், அவனது வருகையைக்கண்ட நகரமாந்தரனைவரும் மிகமகிழ்ந் து வரவேற்றனர். சந்திராபீடனும் அரண்மனை வாயிலை அடைந்து குதிரையினின்றும் இறங்கினன்; மந்திரிகள் புடைசூழத் தருமதேவதையைப் போலத் திருவோலக்கத்தில் வீற்றிருக்கும் தந்தையைக் கண் டனன்; அவருடைய திருவடிகளிலே வீழ்ந்து பணிந்த னன்; அவராலே எடுத்து அணைத்து உச்சிமுகரப்பட்டு ஆசீர்வதிக்கப்பெற்றனன்; அங்கிருந்து நீங்கித் தனது தாயாரது அந்தப்புரத்திற்குச் சென்றனன்; அங்குள் ளாரனைவரையும் தனது காட்சியைக்கொடுத்து மகிழ் வித்தனன்; தனது அன்னையாரைக்கண்டு அவரைத் தன்னை ஈன்றபொழுதினும் பெரிதுவக்கச்செய்தனன்; அவருடைய அடிகளிலே தனது முடிபடுமாறு வணங்

கினன்; அவராலும ஆசீர்வதிக்கப் பெற்றனன்; அவ்வாறே சுகநாதரது மாளிகைக்குச் சென்றுவணங்கி அவராலும் மனோரமையாலும் ஆசீர்வதிக்கப்பெற்றனன்; தனக்கென அமைக்கப்பெற்ற குமாரபவனம் என்னும மாளிகைக்குச் சென்றனன். இம்முறையே வைசம்பாயனனும் அவர்களனைவராலும் ஆசீர்வதிக்கப் பெற்றனன்.

இங்ஙனமாகத் தாய்தந்தையர்களுடையவும், மற்றுமுள்ளோர்களுடையவுமான மனங்கள் களிக்க வளர்ந்துவந்த சந்திராபீடனுக்கு ஒருநாள் வேட்டையாடுவதிற் பெருவிருப்பு உண்டாயது. அவன் அதனைத் தனது தந்தையாருக்குத் தெரிவித்து உத்தரவுபெற்றான்;

பொலிஅதன் சட்டைஇட்டுப் பொருவருங் கச்சைவீக்கி
வலிபெறக் கரிய நூலால் மயிர்முடி எடுத்துக் கட்டிச்
சிலையுடன் அயில்கள் ஏந்திச் செறிந்தசங் கிலிநாய் பற்றிக்
கொலைபயில் வேடர் முன்கோ லாகலம் செய்தேஉட

பரிவாரங்களுடனே வேட்டைக்குச் சென்றான்; பல மிருகங்களை அகப்படுத்திக் கொண்டான்; அந்த நினைப்புடனேயே அரண்மனைக்குவந்தான்; பரிவாரங்களுக்குத் தக்கபரிசுகளைக் கொடுத்தான். அற்றைப் பொழுதும் போயது. இரவையும் இனிது கழித்தான்.

மறுநாள், விலாஸவதி, தனக்குப் பரிசாரிகையாகக் கிடைத்தவளும், அரசகுலத்திலுதித்தவளும், நற்குண நற்செய்கைகள் நிறைந்தவளும் ஆகிய பத்திரலேகை எனப்பெயரிய ஒரு பணிப்பெண்ணைச் சந்திராபீடனுடன் இருந்துவருமாறு கைலாஸன் என்ற ஒரு தூதுவனுடன் அனுப்பினாள். அக்கைலாஸன் அவளை

அழைத்துவந்து சந்திராபீடனிடம் ஒப்புவித்ததோடு அரசியார் பணித்ததையும் அறிவித்தான். சந்திராபீடனும் 'அனைத்தும் அன்னையார் உத்தரவின்படியே ஆகுக' என்று மறுமொழி பகர்ந்து, அதனைத் தாயாரிடம் தெரிவிக்குமாறு கட்டளையிட்டுக் கைலாஸனை அனுப்பினான்; அன்று முதலாகத் தனக்கான சகலவிதமான காரியங்களிலும் பத்திரலேகையையே நியோகம்செய்துவந்ததோடு அவளை ஆதரித்தும்வந்தான். அவளும் அத்துணைச்சிறப்பாகவே இவனிடம் நடந்துவந்தாள். இருவருடையமனங்களும் ஒன்றுபட்டன.

இப்படியிருக்கச் சில காலஞ்சென்றபின், அரசன் சந்திராபீடனுக்கு இளவரசுப் பட்டஞ்சூட்ட விரும்பினான்; அமைச்சர் முதலாயினோரைக் கூட்டி ஆலோசனை செய்தான்; அதற்கான காரியங்களை முற்றுவிக்குமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டான்.

இந்நிலையிலே, சுகநாதர், தமது மனைக்குவந்த சந்திராபீடனை அருகழைத்து அவனுக்கு அரசனுவான் கைக்கொள்ளவேண்டுவன இவைஇவை என்பனதையும், கடியவேண்டுவன இவைஇவை என்பனதையும் நன்கு விளக்கிக்காட்ட எண்ணி

"மிகமிக வருந்தி யாகிலும் இந்த
மேதினி தீதுறை யாமல்
தகைமிகு முதிய குரவர்நிந் தியாமல்
சதிரார னவர்க்ககப் படாமல்
அகமகிழ் தோழன் மார்இக ழாமல்
ஆசைகள் தம்வசத் திழாமல்
திகழ்தரு நல்லோர் தாம்அக லாமல்
தீயவர் தாம்அணு காமல்

மஞ்சுசேர் குழலார் மிகஅணு காமல்
வாழ்வினால் மதிமயங் காமல்
செஞ்சொல்வாழ் தெய்வ மாதினை விடாமல்
செருக்குளம் தனைக்கல வாமல்
விஞ்சுநூல் அமைச்சர் மொழிகளை மறாமல்
விடயமா னவைகலி யாமல்
நெஞ்சுதான் ஓடி வரைகட வாமல்
நீதிநூல் அடைவிலே ஒழுகி
மனமகிழ் உந்தை தரும்அபி ஷேக
மங்கலம் அதனையும் பெற்றான்
இனமிகு குரவர் வழிவழி யாக
வந்தபூ பாரமும் தாங்கிக்
கனைகழல் பணியா தவர்களை வணக்கிக்
கண்டொழு பவர்களை உயர்த்திப்
பனைகதிர் முடியாய் உந்தையே போலப்
புகழுடன் வாழ்ந்திரு நீயே.''

என்று கூறியதோடு அன்னவன் எவரிடத்திலும் எக் காலத்திலும் காட்சிக்கு எளியனாகவும் கடுஞ்சொல்லன் அல்லனாகவும் இருப்பதோடு அறம்நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும் பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறி தாம் ஆகையினாலே என்றும் செல்வச்செருக்கற்றவனாக இருத்தல் வேண்டும் என்பதையும் போதித்தார். கரு வியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும் அருவினையும் இவை இவை என்பதை அவ்வக்காலத்திற்கேற்ப முன்னர் உணர்ந்து நன்கு இடித்துரைக்கவல்ல தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல், வன்மையுள் எல்லாந்தலை ஆயது என் பதை முன்னரே கசடறக் கற்றிருந்த சந்திராபீடன், சுகநாதரது தூய்மையான அறவுரைகளைக்கேட்டான்; பெரிதும் மனமகிழ்ந்தான்; தனது மாளிகைக்குவந்

தான்; வழக்கம் போலத் தன்னுடைய காலங்களை இனிது கழித்துவந்தான்.

பின்னர்ச் சிலநாட்கள்செல்ல, அரசன் சோதிடர்களை அழைத்து நல்ல சுபமுகூர்த்தத்தை ஏற்படுத்தினான். இந்நிலையிலே, சந்திராபீடன் தனக்குத்திக்கு விஜயம் செய்ய இருக்கும் எண்ணத்தைத் தந்தைக்குத் தெரிவித்தான். தாராபீடன் இளவரசுப் பட்டம் சூட்டும் முகூர்த்தத்தையே அதற்கும்நியமித்தான். சந்திராபீடனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட இருக்குஞ் செய்தியும் முகூர்த்த நாளும் நகரம் எங்கும் அறிவிக்கப்பெற்றன. வீதிகள் எங்கும் மகரதோரணங்கள் முதலியவற்றால் நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்றன. குறித்த முகூர்த்தவேளையும் வந்தது.

உடனே, வேந்தன் சந்திராபீடனுக்குப் புண்யதீர்த்தங்களாலே மங்கலஸ்நானம் செய்வித்து, அரசர்களும் மந்திரி முதலாயினோரும் மற்றுமுள்ளோரும் புடைசூழ, வேதியர்கள் மந்திரங்களைக்கூற, மங்கல வாத்தியங்கள் முழங்கப் பரம்பரையாகவந்த தனது சிங்காதனத்திலே அவனை அமர்த்தினான். அச்சமயம் நடைபெறவேண்டிய மரியாதைகள் அனைத்தும் நன்கு நிறைவேற்றப்பட்டன. அக் கொண்டாட்டம் அரசனாலும் நகர மாந்தர்களாலும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அரசன், மகனை இளவரசாக்கியதனாலேயே தனது பாரமனைத்தும் குறைந்துவிட்டதாகக் கருதினான். சந்திராபீடன் மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை, என்னோற்றான் கொல் என்னும் சொல் என்றதற்குத் தன்னை இலக்கியமாக்கிக் கொண்டிருந்தான் ஆதலின் வைசம்பாயனனைத் தனக்கு

உற்றமந்திரியாக நியமித்துக் கொண்டான்.

அப்பால், வைசம்பாயனனுடனே சந்திராபீடன் உரியகாலத்தே திக்குவிஜயம் செய்யப் புறப்பட்டான். சேனைகளும் கிழக்குமுகமாகப் பிரயாணமாயின; சந்திராபீடன்

வணங்காத வரைத் தாழ்வித்தும்
வணங்கி யவரை வாழ்வித்தும்
அணங்கால் அஞ்சி நின்றவரை
அஞ்சேல் என்றென் றருள்புரிந்தும்
இணங்கா அபயம் என்றவரை
ஈடேற் றியும்வந் தெதிர்ந்தாரைப்
பிணங்கா முடியை வேர்உடனே
பிடுங்கி எறிந்தும் பிழைபொறுத்தும்
கூடா அரசர் முடிபறித்தும்
குமாரர் பலரை முடிவைத்தும்
தேடா நிதிகள் சேகரித்தும்
தேச நீதி நிலையிட்டும்
பாடா அரசர் பாவலராய்ப்
பாடும் பரணி பலகேட்டும்
காடா னவைகள் எவற்றும்தன்
காமத் தம்பம் நடுவித்தும்
குறைஒ தரிய மேம்பாடு
கொற்றம் பெருமை வெற்றிகெடும்
பொறையோ டினைய குணம்முழுதும்
புவிகள் தோறும் பொலிவித்தும்

தனது வன்மையை எல்லாத்திக்குகளிலும் புலப்படுத்திப் பூமியின் வடகீழ்த்திசையை அடைந்தான்; அங்கே கடற்கரைக்கு அருகாமையிலுள்ள சுவர்ண புரம் என்ற ஓர் இடத்தைத் தனக்கு வாசஸ்தலமாக்கிக்கொண்டான்; சேனைகளும் அவ்விடத்திலேயே

தங்கினை; களைப்பைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டுச் சில நாட்களை அவ்விடத்திலே கழிக்க எண்ணினான்.

இப்படியிவ்வாறாக, ஒருநாள் வேட்டைமார்க்கமாகச் சென்றிருந்த சந்திராபீடன், அங்கே ஓரிடத்தில் பாதி மனிதவுடலும் பாதி குதிரை உடலும் உள்ள கின்னர தம்பதியைக் கண்டான். அவர்களைக் கைப்பற்ற வேண்டுமென்ற ஆசை அவனது உள்ளத்து உதித்தது. அதனால் அவன், தனது இந்திராயுதத்தை அவர்களை நோக்கிச் செலுத்தினான்; அவர்கள் இவனைக்கண்டு பயந்து விரைந்தோடத் தலைப்பட்டார்கள். அவர்கள் ஓடவும் இவன் இன்னும் வேகமாகச் செல்லுமாறு இந்திராயுதத்தை ஏவினன். இந்திராயுதமும் ஒரு முகூர்த்தநேரத்திற்குள் பதினைந்துயோஜனை தூரமுள்ள வழியைக் கடந்துவிட்டது. எனினும். அக்கின்னர தம்பதிகளோ இவன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அங்கேதோன்றிய ஒரு குன்றின் உச்சியில் ஏறிவிட்டார்கள். என்னசெய்வான் பாபம்! இனி அவர்களிருக்குமிடத்திற்குத் தன்னாற் போகமுடியாதென்பதை உணர்ந்தான்; 'ஏது யான் இவ்வாறு பிள்ளைமதியனானது? எண்ணித்துணிக கருமம் துணிந்தபின், எண்ணுவமென்பதிழுக்கு என்னும் உறுதியுரையைச் சிறிதும் உள்ளத்திருத்தாதொழிந்தேனே! சிறுபிள்ளை இட்ட வேளாண்மை வீடுவந்து சேராது என்ற பழமொழி என்னிடத்திற் பலித்துவிட்டது போலும்!' என்றுகூறித் தன்னைத்தானே பழித்துக்கொண்டான். பிறகு, ஒருவகையாக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தனது சேனை முதலியன தங்கியிருக்கும் சுவர்ணபுரம்போகத் திரும்பினான். அச்சமயம்

பெருங் காற்றடித்துப் பூமியானது சருகுகளாலும். இலைகளாலும் மூடப்பெற்றிருந்ததால் அவனாலே தான்வந்த வழியை உணரக்கூடவில்லை; அதனால் அவன் சற்றுத் திகைத்து நின்றான்.

இவ்வாறு சிறிதுபொழுதுசெல்லச் சந்திராபீடன் விரைந்து வந்ததாற் பெரிதுங்களைப்புற்றிருந்த தனது இந்திராயுதத்தைப் பார்த்தான். 'இதனை மேய்த்துக் குளிப்பாட்டித் தண்ணீர் அருந்தச் செய்வேன்; யானும் நீரருந்திச் சிறிது இளைப்பாறுவேன்' என்று எண்ணினான். அங்கே காணப்பெற்றவும், பூமியைத் தண்ணீரால் நனைத்துச் சேறாக்கி இருந்தவுமான யானை பன்றி இவைகளின் அடிச்சுவடுகளாற் சமீபத்திலே ஏதேனுமொரு நீர்நிலை இருத்தல் வேண்டுமென ஊகித்தான்; அச்சுவடுகளைப்பற்றியே குதிரையைச் செலுத்திக்கொண்டுபோனான். அங்கே கைலையங்கிரி காணப்பட்டது. அப்பொழுதுதான் வெகுதூரம் வடக்கே தான் வந்திருப்பதை உணர்ந்தான். அதன் வடகிழக்கிலே ஒரு சோலை இருப்பதைக் கண்டான்; அதனுட் புகுந்தான்;

அக்காவின் நடுவாக அரியவனை தெய்வதைக்கென்
றயனார் செய்த
திக்கான நிலாமுற்றம் போன்றும்எழில் திரிபுவனத்
திருவின் சீர்பார்க்
கைக்கான கண்ணாடி போன்றும்உயர்
கயிலாயம் உருகிக் கால்கொண்டு
இக்காவில் நின்றதுபோன் றும்கடல்வளம்பிறந்த
இடமே போன்றும்

3
தவமுனிவர் உளம்போன்றும் சான்றோர்தம் குணம்போன்றும்
தட்பமெய்தி
உவமையிலா வழகைத்தெளித்து வண்டானம் வண்டினம்
ஒலிமல் கண்டம்
இலையிலையான் மிகவிளங்கி வனசமலர் குமுதமலர்
இந்திர நிலைப்
புவனமடமகளிர்வதனமும் இதழும் விழியுமெனப்
பொலிந்து தோன்றிக்

கண்டாரைக் களிப்புறச் செய்வதும், படிந்தாரைப் பரிசுத்தராக்குவதும் ஆகிய அச்சோதம் என்றபெயரினை யுடைய ஓர் அழகிய பொய்கையைக் கண்டான்; 'கின்னரதம்பதியைப் பின்பற்றிவந்தது வீணானது' என்று முன்னமே தான இரங்கியதற்காகப் பெரிதும் இரங்கினான். கண்ணைப்பெற்ற பயனை இன்றே யான் பெற்றேன் எனக் களித்தான்; பின்னர்க் குதிரையின்மீது உள்ளகலனை, சேணம் முதலாயவற்றைக் கழற்றினான்; அது புழுதியிலே விழுந்துபுரண்டு தனது களைப்பைத் தீர்த்துக்கொண்டு சிறிதுமேய்ந்தது. அப்பால் அதற்குத் தண்ணீர் காட்டிக் குளிப்பாட்டி அதனைக் கரையிலே கொணர்ந்து கட்டினான். தண்ணீரிலிறங்கிக் கைகால்களைச் சுத்தஞ்செய்துகொண்டு நீருந்தினான். தாகவிடாய் தீர்ந்தவனாகிக் கரையிலேவந்தான்; ஒரு மரத்தின் நிழலிலே தாமரை இலைகளைப் பாயலாகப் பரப்பினான்; தனது மேலாடையைத் தலையணையாகச் சுருட்டிவைத்துக்கொண்டு படுத்தான்.

அப்பொழுது,
கவ்வியபுல் கடியாது தலைகிளர்ந்து செவிசெறித்துக்
கவனவாசி
செவ்விமலர்ப் பூந்தடத்தின் வடமேலைத் திசைநோக்கித்
திகைத்தே நிற்க

வெவ்வியவேல் மன்னனும் தென்னஅத் திசைநோக்க
வீணாநாதத்து
எவ்இயல்பும் இனிதான தொருகீதம் மனோகரமாய்
எழுந்த தன்றே.

எழுநும் அத்திசையையே உற்றுநோக்கினான். ஆனால் அவனுக்கு அங்கே ஒன்றும் புலனாகவில்லை. எனினும், அவன இடைவிடாது அதனையே கவனித்துக் கேட்டான். பின்னர் அந்தவோசை எங்கிருந்துவருகின்றதோ அந்தத்திக்கினை நோக்கிச் சென்றான். அங்கேயிருந்த சந்திரப்பிரபை என்ற பெயரினையுடைய அம்மலையடிவாரத்திலிருந்த ஒரு கோயிலைக் கண்டான் அதனுட் சென்று அங்கே கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் குன்றவில்லியைத் தரிசனஞ் செய்தான். ஆங்கு வடதிசையை நோக்கிப் பிரமாசனத்தில் வீற்றிருந்து வேணிப்பிரானை உன்னி வீணைவாசித்துப் பாடிக் கொண்டிருக்கும், வெண்ணீறு பூசிப் பூணூல் தரித்திருந்த ஒரு வித்தகியைக் கண்டான் தனாலேலே கேட்கப்பட்ட அந்த இன்னோசையானது இவளிடமிருந்துதான் வந்திருக்கவேண்டும் என எண்ணினான். அவளைப்பற்றிய முழு விவரங்களையும் வினவித் தெரிந்து கொள்வதற்காக அவளது வீணாகானத்தின் முடிவு நேரத்தை எதிர்பார்த்து மறைந்திருந்தான்.

பின்னர்ச் சிறிதுநேரஞ் சென்றதும் அம்மங்கை தனது கானத்தை நிறுத்திக் கடவுளை வணங்கினாள்; பக்கத்திலே மறைந்திருந்த சந்திராபீடனைக் கண்டாள். "தேவரீர் வரவு நல்வரவாகுக; தயைசெய்து அடியவளது விருந்தினை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்" என்று அவனைநோக்கிக் கூறினாள். அச்சமயம் ஆருமில்லவர்க்குத் தெய்வந்துணை யாகும் என்பது அவனு

க்கு உறுதியாயது. அவனும் மிக்க பணிவுடன் அம்மங்கையை நோக்கி "அம்மணி, தங்களது உத்தரவின்படியே ஆகுக" என்று கூறி அவளது வேண்டுகோளை ஏற்றான்.

உடனே அம்மாது சந்திராபீடனுடன் தனது குகைக்குச்சென்றாள்; ஒரு கற்பாறையின்மீது அவனை அமர்த்தினாள்; அர்க்கிய முதலாயவற்றைக் கொடுத்து முறைப்படி உபசரித்தாள். மரங்களினின்றும் தாமாகவே விழுந்த பழங்களால் அவனை உண்பித்தாள். அப்பால் சிறிதுபோழ்து சும்மாஇருந்து பிறிதொரு பாறையில் உட்கார்ந்தாள். சந்திராபீடனுடைய செய்திகளை வினவினாள். அவனும் தன்னுடைய செய்திகளைத் திக்குவிஜயம் முதலாகக் கின்னர தம்பதிகளைத் தொடர்ந்ததீறாக ஒன்றையும்விடாமல் மொழிந்தான். பின்பு இந்திராயுதத்தையும் அங்கே கொணர்ந்து கட்டித் தனியே ஓரிடத்தில் அமர்ந்தான்.

இந்நிலையில் அம்மங்கை வழக்கமேபோலக் கந்தமூலபலாதிகளை உண்டு ஒரு பாறையின் மீதிலமர்ந்தாள். அவளது உத்தரவின்மேல் சந்திராபீடனும் அவளுக்கு எதிராக இருந்த பிறிதொரு கற்பாறையின்மீதில் மிக்க அடக்கத்துடனே அமர்ந்தான். ஒரு முகூர்த்தநேரம் வாளாஇருந்தான். அப்பால் அம்மங்கையை நோக்கி "அம்மணி, தங்களது பெயர் யாது? ஊர் யாது? பெற்றோர்களின் பெயர்கள் யாவை? இவ்விளவயதிலே தாங்கள் இத்தகைய துறவினைக் கைக் கொள்ளக்காரணம் யாது? ஜனசஞ்சாரம் அற்ற இடத்திலே தாங்கள் தனித்து உறைவது

எதற்காக? தயைசெய்து திருவுளமிரங்கல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான்.

வேண்டலும், அம்மாது சிறிதுநேரம் தனது நிலைமையைக்குறித்து வருந்திச் சந்திராபீடனை நோக்கித்தன்னுடைய வரலாறுகளைக்கூறலுற்றாள். அவை: "கந்தர்வர்களுக்குச் சொந்தமான ஹேமகூடம் என்ற ஒருகுன்றுண்டு. அந்தக்குன்றிலிருந்து ஹம்ஸன் எனப் பெயரிய ஒரு கந்தர்வ ராஜர் செங்கோல் செலுத்தி வந்தார். அவர் சந்திர கிரணத்திலிருந்து பிறந்த கௌரி என்னும் பெயரினையுடைய ஓர் அப்ஸர கன்னிகையை மணந்தார். அவர்களுக்கு யான் மகளாகப் பிறந்தேன். என் பெயர் மஹாச்வேதை என்பது. யான் அவர்களால் மிக்க சிறப்புடன் வளர்க்கப்பெற்றேன். அங்ஙனம் வளர்ந்து வருங்கால் ஒருநாள் நான் எனது அன்னையாருடன் இந்த அச்சோகத்திற்கு நீராட வந்தேன்; அக்குளத்தைச் சுற்றிலுமுள்ள இடங்கள் பார்ப்பதற்கு மிக்க இன்பத்தைத் தந்தமையின் தோழிமாருடன் சுற்றி விளையாடினேன்; நறுமணங்கள் எல்லாவற்றையும் தனக்குக் கீழ்ப்படுத்திய ஒரு புதிய நறுமணத்தினாலே இழுக்கப்பெற்றுத் தனிமையிற் சிறிது தூரம் சென்றேன்; மிக்க வடிவழகும் தக்க யௌவனமும் வாய்ந்த ஒரு முனி குமாரர் தமது நண்பருடன் நீராடிவருவதைக் கண்டேன்; அவரது காதிலே செருகப்பட்டிருந்த பூங்கொத்தைக் கண்டேன்; 'அந்நறுமணத்தைத்தந்தது இப் பூங்கொத்தே' என்று உணர்ந்தேன்; என்னை அறியாது என் மனம் அவரிடம் அடைக்கலம் புகுந்தது; யானும் இறுதியாக வந்தனம் செய்தேன்; பின்னர்ச் சிறிதுநேரம்

ஓதுகின்றேன்; அப்பால் அவருடன்வந்த மற்றொரு முனிகுமாரரை நோக்கி அவரைப்பற்றியும் பூங்கொத்தைப்பற்றியும் வினவினேன்; அதற்கு அவர் என்னை நோக்கி 'இவர் பெரும்புகழ்வாய்ந்த சுவேதகேது என்ற ஒரு முனிவருக்கும் மஹாலட்சுமிக்கும் காட்சியாலே பிறந்த புத்திரராவர்; புண்டரீகர் என்ற பெயரினையுடையவர்; பிரமசரிய விரதத்தையே கைக்கொண்டொழுகுமாறு தமது தந்தையாரால் உபதேசிக்கப்பெற்று அதனையே கடைப்பிடித்துவருபவர். இப்பூங்கொத்தோ வனதேவதையால் இவருக்கு இவரது கட்டழகைக்கண்டு அளிக்கப்பட்டது' என்று கூறினர். யானும் அவர்களையே பின்பற்றிச்சென்றேன். அக்கால் அம்முனிகுமாரர் என்னைநோக்கி, 'பைந்தொடி, உனதுவிருப்பம் இப்பூங்கொத்திடத்ததாயின் யானே அதனைத் தருவேன்' என்று கூறித்

தானேயவ் தென்செவிமேல் தன்செவிமேல் நின்றொளிரும்
தேன்சேரும் பூங்கொத்தைச் சேர்த்தினான்; அப்போதென்
பால்சேய செஞ்சிவன்கை வைத்திடத்தே சென்றொடுங்கிக்
கோனே, இன் புற்றதெல்லாம் கூற முடியாதே.

அன்றியும், அவர் ஏதோ சிறிது மயங்கினவராகித் தமது ஜபமாலை கீழ்விழுவதையும் உணர்ந்திலர்; யான் அதனை ஏந்தி அணிந்துகொண்டேன். அச்சமயம் நீராட்டமும் முடிந்தது; 'நகருக்குப்போகப் புறப்படுங்கள்' என்று என்னைத் தோழி அழைத்தாள். யானும் அச்சோதக்கரையை அடைந்தேன். அப்பொழுது அம்முனிகுமாரர் தமது நண்பராகிய கபிஞ்சலன் என்பாருடன் வந்து 'ஜபமாலையைக் கொடுத்துவிட்டுப்போ' என்று என்னை நோக்கிக் கூறினர். யானும் 'ஐயா, இதோ தருகின்றேன்: பெற்றுக்கொள்

ளுங்கள்' என்று கூறி எனது முத்துமாலையைக் கொடுத்து நீராடி அன்னையுடன் அரண்மனைக்குச் சென்றேன். மறுநாள் கபிஞ்சல முனிவர் எனது மாளிகைக்குவந்து என்னால் உபசரிக்கப்பெற்று ஜபமாலையைக் கேட்டுப் பெற்றுச்சென்றார் இந்நிலையில் எனது எண்ணத்திற்கு இடையூற்றினை விளைவிக்க எண்ணியதுபோல அற்றை இரவிலேயே அம்முனிகுமாரராய புண்டரீகரது உயிர், யான் அவரை நாடிச்சென்று கொண்டிருக்கையில் என் நிமித்தமாகவே அவரது உடலைவிட்டு நீங்கியது என்பதை,

'வல்நெஞ்சாய் என்னை மறந்தாய் உனக்கிந்தக்
கல்நெஞ்சார் தந்தார் கடைப்பிடியின் நீ இறக்க
இன்னம்சா காதிருந்தேன் என்னே இரேன்காண்உன்
பின்அஞ்சா தேவருவேன் பின்பார்த்துப் போகாயே,

ஆரோ டினிஇருப்பேன் ஆரோ டினிமகிழ்வேன்
ஆரோ டினிமனத்தில் அற்றதெலாம் சொல்லுவேன்
ஆரோ துணையாவர் ஐயோ தமியேனுக்கு
ஆரோ இனித்தஞ்சம் ஆற்றேன்நான் ஆற்றேனே,

உன்னைப் பிரிந்தும் உயிர்வாழ வல்லேனோ
நின்னைத் தொடர வருகின்றேன் நிட்டூரா
என்னைப்பின் பாராமல் ஏகினையே மாச்சுவேதை
தன்னைச் சிறிதும் நினைந்திலையே தக்கோனே' என்ற

கபிஞ்சலமுனிவரது புலம்பலால்உணர்ந்தேன்; யானும் பெரிதும் வருந்தி

'பாவியேன் பாவியேன் புண்டரிக முனியே
பாதகமே செய்தாய்
மேவியே வாழஎண்ணி நான்வரவும் அவமதித்து
விட்டுப் போனாய்

தாயியே நீவெறுக்கத் தாழ்வேது செய்தேன்யான்
தாழ்வுண்டேனும்
ஆவியே அனையானே அறக்கொடுமை செய்வர்களோ
அறம்செய் வோரே,

இனியெனக்கோர் புகல்இல்லை இனியெனக்கோர் துணைஇல்லை
என்னென் றுற்ற
இனியெனக்கோர் தந்தைதாய் என்பவரும் இல்லைஇனி
எல்லாம் நீரே
இனியெனக்கு முன்பளித்த கருணையினைத் தோற்றுவீர்
இங்கே யாஎன்று
இனி அனைத்தென் இடர்களையீர் இருடிகளும் முனிவர்களோ
எம்பி ரானே,

இந்தவன தெய்வதைகாள் இறைஞ்சினேன் என்கோவை
எழுப்பித் தாரீர்
அந்தம்இலாய் கயிலாயா ஆரும்அற்றேற் கருள்புரியாய்
அவனிமாதே
வெந்துயர்கண் டிடஉயிரை மீட்டருளாய் வாட்டம் இலா
விதியே நீதான்
சிந்தைமகிழ்ந் தினிஇரங்காய் தெய்வங்காள் யானேதான்
தியங்கு வேனே.'

என்று புலம்பிக் கொண்டிருந்தேன். அக்கால், சந்திரமண்டலத்திலிருந்து ஒரு புருஷன் கீழே இறங்கினான்; அம்முனி குமாரரது உயிரற்ற உடலை எடுத்தேகினான்; ஏகுங்கால் அப்புருஷன், நீரற்ற நிலத்திலுற்ற பயிரைப்போலவும், கைப்பொருளில்லாதவன திளமையைப் போலவும், தருமநெறியைப் பொருந்தாமல் வறிதே மூப்பினை எய்தியவனது மறுமைச் செல்வத்தைப்போலவும் அம்முனி குமாரரை அடையப்பெறாது அழுகிழந்து இறக்கத்துணிந்த என்னை நோக்கி 'மஹாச்வேதை, நீ, சிறிதுகாலம்பொறுத்திரு; உனது

எண்ணம் பூர்த்தியாகும்; அதுவரையில் இச்சரீரம் எனது உலகத்திலிருக்கும்' என்று கூறிச்சென்றனன். இவ்வாறு தமது நண்பனது உடலை அப்புருஷன் எடுத்தேகுவதைக் கண்டு சகியாத கபிஞ்சல முனிவர் அவனைப் பின்தொடர்ந்தார். யானும் அந்தப் புண்ணிய புருஷர் சொன்ன வாக்கை நம்பியே இங்கு இக்கோலங் கொண்டு இன்னும் உயிரைத் தாங்கியிருக்கின்றேன்” என்பன.

அப்பால், சந்திராபீடன் “அம்மணீ, தாங்கள் ஏன் மீண்டும் வருந்தல்வேண்டும்? தாங்களோ அனைத்தையும் காரியத்திற்காட்டி வருகிறீர்கள். உயிரற்ற உடலாயிருப்பினும் நட்பின் வீடில்லை [illegible] என்ற நீதியை உணர்ந்து, பழகிய நட்பின் முதிர்ச்சியால் கபிஞ்சல முனிவரும் உடன் சென்றிருக்கிறார். அப்புருஷரும் 'மீட்டும் பயன்பெறுவாய்' என்று கூறியுள்ளார் இந்நிலையில் தாங்கள்வருந்துவது தகுதியா? பொருந்துவனபோமினென்றுற்றோரென்பதை யான் தங்களுக்கு உணர்த்துந் தகுதியுடையனாவேனோ? அனைத்தும் உரியகாலத்திற் சித்திக்கும்; கவலாதொழிக” என்றுகூறித் தேற்றினான்

இங்ஙனமாக, அற்றைப் பொழுதும் போயது; மாலைக்கடன்களை முடித்துக்கொண்டு இருவரும் முறையே தங்கள் தங்களுடைய கற்பாறைகளிலே அமர்ந்தனர். அக்கால் சந்திராபீடனுக்கு மஹாச்வேதையின் பணிப்பெண்ணாகிய தரளிகை என்பாள் இல்லாதிருந்தது ஒரு குறையாகக் காணப்பட்டது. உடனே, அவன் மஹாச்வேதையை நோக்கி, “அம்மணீ, இன்பத்திலும் துன்பத்திலும் தங்களைப் பிரியாது உறைபவ

4
ளாகிய தரளிகை எங்கே சென்றனள்" என்று வினவினன்.

அதற்கு அவள், சந்திராபீடனை நோக்கி "ஐயா, சைத்திரரதம் எனப்பெயரிய இக்கானகத்தையும் அச்சோதம் என்ற இப்பொய்கையையும் இக்கோயிலையும் உண்டுபண்ணின சித்திரரதன் என்ற ஓர் இறைவன் இருக்கிறான். அவனுக்கு மதிரை என்ற பெயரினையுடைய அவனது மனைவியினிடத்திலே பிறந்த காதம்பரி என்னும் புகழ்பெற்ற ஒரு பெண்மணி இருக்கின்றாள். அவள் எனது பிறவித்தோழியாயவள் எங்களிருவருக்கும் உடல்கள்மாத்திரம் வேறாக அமைந்துள்ளன.

இத்தகைய அவளுக்கு அவளுடைய பெற்றோர்கள் மணவினை முடிக்க எண்ணுந்தோறும் அவள் அவர்களை நோக்கி 'எனது உயிர்த்தோழியாகிய மஹாச்வேதை தாங்கொணுத் துக்கத்தோடு தனித்திருக்கையில் யான் மாத்திரம் எவ்வாறு மணந்து மணாளரோடுஉறைவது' என்றுகூறி மறுத்துவருகிறாள். அன்றியும், அவள் தனது விருப்பத்திற்குமாறாக ஏதேனும் பெற்றோர்கள் செய்யத் தொடங்கினால் உடனே தான் தனதுஉயிரை மாய்த்துக்கொள்வதாயும் உறுதிகூறியிருக்கிறாள்.

இச்செய்திகளையுணர்ந்த சித்திரரதன், காதம்பரி தனக்கு ஒரேபெண்ணாக இருப்பதைக் கருதி அவளைச் சமாதானப் படுத்துமாறு வேண்டி க்ஷீரோதன் என்ற தூதுவனை என்னிடம் அனுப்பினான் அதைப் பற்றிக் காதம்பரியிடம் போய்வருமாறு தரளிகையை அத்தூதுவனுடன் அனுப்பியுள்ளேன்" என்று கூறிச் சிறிது போழ்து வாளாஇருந்து நித்திரைபோனாள்.

சந்திராபீடனும் இலைகளாலாகிய தனது படுக்கையிலே உட்கார்ந்து வைசம்பாயனன், பத்திரலேகை, ஏனைய அரசகுமாரர்கள், சேனையிலுள்ளார் முதலிய அனைவரையும் உன்னியவண்ணமே உறங்கினான்.

மறுநாள் விடியுமுன் இருவரும் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தங்கள் தங்களுடைய கற்பாறைகளிலே அமர்ந்தனர். அக்கால், கேயூரகன் என்ற ஒரு கந்தர்வ வாலிபனுடன் தரளிகை வந்தனள். அவ்விருவரும் அங்கே இருந்த புதியவனாகிய சந்திராபீடனைக் கண்டனர்; அவனது வடிவழகைப்பார்த்து ஆச்சரியமுற்றுத் தங்கள் தங்களுடைய கற்பாறைகளிலே அமர்ந்தனர்.

அப்பால், மஹாச்வேதை தரளிகையை நோக்கி "நங்காய், நீ எனது உயிர்த்தோழியாகிய காதம்பரியைக் கண்டனையா? யான் சொல்லியனுப்பிய செய்திக்கு அவள் உடன்பட்டனளா? அங்குள்ளார் அனைவருஞ் சுகமாயிருக்கின்றனரா? காதம்பரி ஏதேனும் என்னிடங் கூறுமாறு சொல்லியது உண்டா? உளதெனிற் கூறுவாயாக" என்று வினவினள்.

உடனே, தரளிகை பெரிதும் வணங்கினவளாகி மிக்க அடக்கத்துடன் மஹாச்வேதையை நோக்கி "அம்மணீ, சமுகத்திய உத்தரவின்படியே சென்றேன்; தங்களது தோழியைக்கண்டு தாங்கள் சொல்லிய செய்தியை உள்ளபடியே தெரிவித்தேன்; அங்குள்ளார் அனைவருஞ்சுகம். மற்றுமுள்ள செய்திகளை இக்கேயூரகன் என்பார் கூறுவர்" என்று மறுமொழி கூறினாள்.

கூறலும், மஹாச்வேதை கேயூரகனை நோக்க, அவன், அவளைப்பார்த்து வணக்கத்தோடு "அம்மணீ, தங்களது தோழியாராகிய காதம்பரி தேவியார் தங்களுக்குச் சொல்லவேண்டி உத்தரவிட்ட செய்தி அடியில் வருமாறு. அது:—'எனது அருமைத்தோழியே' நீ, சொல்லி அனுப்பிய செய்தி என்னால் கேட்கப்பட்டது. யான் அதனை என்னைப் பரீட்சைசெய்ய எண்ணிச் சொல்லியதாக நினைக்கிறேன். உயிராகிய உனக்குச் சுகமேற்படும் வரையில் உடலாகிய யான் எனது சபதத்திற்குமாறாக எதற்குஞ் சம்மதியேன்; இனி, இதைப்பற்றி என்னிடம் பேசுவதை நீ கனவிற் கூடக் கருதலாகாது.' என்பதே" என்று கூறிமுடித்தான். அதைக்கேட்ட மஹாச்வேதையும் நன்கு ஆலோசனைசெய்து கேயூரகனைப் பார்த்து "அப்பா, நீ போ; யானே நேரில்வந்து தக்கவாறு செய்வேன்" என்று சொல்லி அவனை அனுப்பினாள்.

அப்பால், மஹாச்வேதை சந்திராபீடனை நோக்கி "ஐயா, ஹேமகூடத்தைப்பற்றி யான் உங்களுக்கு முன்னமேயே சொல்லியிருக்கிறேனன்றோ? அது பார்வைக்கு மிக்க மனோகரமாயிருக்குமென்பது தாங்களும் உணரக்கூடியதே. அப்பட்டணத்திற்கு என்னுடன் தேவரீர் எழுந்தருள்வீர்களா? அவ்வாறு செய்வதால் தங்களுக்கு ஏதும் அசௌகரியமில்லாதிருக்குமாயின் எனது வேண்டுகோளை நிறைவேற்றி வைக்குமாறு திருவுளமிரங்கப் பன்முறையும் வேண்டுகின்றேன்" என, அவன் அம்மாதரசியை நோக்கி "அம்மணீ, தங்களைக் கண்டதுமுதல் யான் தங்களுக்காட்பட்டவனானேன; தங்களது இஷ்டத்தின்படியே அனைத்தும் ஆகுக" என்றான்.

உடனே, அவ்விருவரும் ஹேமகூடத்திற்குச் சென்றனர் கந்தர்வராஜனது அரண்மனையை அடைந்து காதம்பரியின் மாளிகையைக் குறுகினர் அங்கே ஓர் அழகிய மஹாமண்டபமிருந்தது அன்றியும பல பணிப்பெண்கள் குழுமியிருந்தார்கள். அதனுட் புகவே, அவ்விருவரும் அதன் மத்தியிலே நீலநிறமான விரிப்போடுகூடிய ஒரு கட்டிலிலே தலையைச் சற்றுச் சாய்த்துக் கவலையோடமர்ந்திருக்குங் காதம்பரியைக் கண்டனர்.

அப்பொழுது, சந்திராபீடனது அழகுடைமை முதலாயவற்றைக் கேயூரகனாலுணர்ந்த காதமபரி, மீட்டும் அக்கேயூரகனை நோக்கி "அப்பா, உன்னால் உயர்வாகக் கூறப்பெற்ற அந்த உத்தமர் யாவர்? அவரது ஊர் யாது? பெயர் யாது? வயது எவ்வளவினது? எவ்வாறு மஹாச்வேதையிடம நட்பானார்? அவர் இங்கே வருவாரா?" என்று வினவிக்கொண்டிருக்கையிலேயே சந்திராபீடனும், மஹாச்வேதையும் அம்மண்டபத்துள் நுழைந்தனர்; பெரிதும் ஆச்சரியமுற்றுக்காதம்பரிக்குஅருகேவந்தனர். உடனே கேயூரகன் "அம்மணீ, இதோவந்தார் அவ்வுத்தம புருஷர்." என்றுகூறி அவனையே உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தான்.

அதைக்கேட்ட காதம்பரி சட்டென ஆஸனத்தை விட்டெழுந்தாள்; சந்திராபீடனைக்கண்டு ஒன்றும் பேசவியலாது ஓவியமெனச் சற்று மயங்கினின்றாள்; மெல்லமெல்லச் சென்று மஹாச்வேதையைக் கட்டிக்கொண்டாள்.

அப்பால், மஹாச்வேதை, சந்திராபீடனுடைய வரலாறுகளைத் தனக்குத் தெரிந்தவரையில் மொழிந்தாள். சந்திராபீடனும் மதலேகை என்பவளால் நனகு உபசரிக்கப்பெற்று அங்கேயே ஓர் உயரிய ஆஸனத்தில் அமர்ந்தான்; பின்னர் மஹாச்வேதையின் உத்தரவுப்படி காதம்பரியாலும் முறைப்படி உபசரிக்கப் பெற்றான்; தனக்கென அவர்களாலே நியமித்துக் கொடுக்கப்பெற்ற செய்குன்றின் மீதுள்ள மாளிகையிலிருந்து சிறிது பொழுதை இனிதாகக் கழித்துச் சோலையிலே தங்கினான். காதம்பரியினாலே தனக்குப் பரிசாகக் கொடுக்கப்பெற்ற சேஷன் என்னும் பெயரினையுடைய ஒரு முத்துமாலையைத் தாளிகைதரத் தரித்தான.

இந்நிலையில், மறுநாள் அவனுக்குத் தன்னுடைய சேனைகளிருக்குமிடத்திற்குப் போகவேண்டுமென்ற எண்ணம உண்டாயது; உடனே அவன் தனது உள்ளக்கருத்தை மஹாச்வேதையாற் காதம்பரிக்குணர்த்தினான்; அப்பால் அவன் அவளாலும் பிறராலும் அனுமதியளிக்கப்பெற்றான்; கேயூரகனாற் கொண்டுவரப்பெற்ற குதிரையின் மீதிலேறிக்கொண்டு 'இவரை அவருடைய சேனைகளிருக்குமிடத்திற்கு க்ஷேமமாய்க் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு வாருங்கள்' என்று காதமபரியால் ஏவப்பெற்றுப் பின்தொடரும் பல கந்தர்வர்கள் புடைசூழ, அச்சோதக்கரையை அடைந்தான்; தனது இந்திராயுதத்தினுடைய அடிச்சுவடுகளின் துணையாலே ஆண்டு வந்திருக்கிற தன்னுடைய சேனைகள் தங்கியிருக்குமிடத்திற்கு வந்தான்; தன்னுடன்வந்த கந்தர்வ குமாரர்களுக்குத் தக்கபடி

உபசாரவார்த்தைகளைக் கூறி அவர்களை அனுப்பிவிட்டுத் தனது வாசஸ்தானத்தை அடைந்தான்; இளவரசனாகிய தன்னைக்காணாது ஏங்கியிருக்கும் பரிசனங்களை மகிழ்வித்தான்; வைசம்பாயனனுக்கும் பத்திரலேகைக்கும் தான் தனித்துச்சென்று திரும்பிவந்த செய்திகளைக் கூறியதோடு மஹாச்வேதை, காதம்பரி, மதலேகை, கேயூரகன், தமாலிகை இவர்களைப் பற்றியும் கூறியவண்ணமாகவே அற்றைப் பகற்பொழுதைப் போக்கினான்; சூரியனமஸ்தமய அதே நினைவாக அற்றை இரவையுங் கழித்தான்.

இங்ஙனமாக, மறுநாள் சந்திராபீடன்முன் தலைவணங்கிய வண்ணமாகவே வாயில் காப்போனை பிறிதொரு கந்தர்வனுடன கேயூரகன்வந்தான். அவனைக் கண்ட சந்திராபீடன் எதிர்கொண்டு சென்று மார்புறத்தழுவி இனிது வரவேற்றான்; மஹாச்வேதை, காதம்பரி முதலாயினாருடைய க்ஷேமங்களை வினவினான்.

வினவலும், கேயூரகன் அவனை நோக்கி "ஐயா, ஹேமகூடத்திலே தேவி முதலாயினார் சுகமாயிருக்கின்றனர். தேவரீர் படுக்கையிலே மறதிகாரணமாக வைத்துவிட்டுவந்த சேஷன் என்னும் ஹாரம் இதோ இருக்கின்றது. தயைசெய்து பெற்றுக் கொள்வீர்களாக" என்று கூறிக்கொடுத்தான்

அதைப் பெற்றுத் தரித்துக்கொண்ட சந்திராபீடன் சிறிது போழ்து வாளாஇருந்து பின்னர்க் கந்தமாதனன் என்ற பெயரையுடைய யானை இருக்குமிடத்திற்குக் கேயூரகனுடன் சென்றான்; அப்பால் இந்திராயுதம் முதலாயின கட்டப்பட்டிருக்குமிடத்துக்குவந்

தான்; அங்கே இருந்து காதம்பரி முதலாயினுரைப் பற்றி நன்குவினுவித் தெரிந்துகொண்டான.

உடனே, சந்திராபீடன், கேயூரகனுடனும் பத்திரலேகையுடனும் புறப்பட்டு ஹேமகூடத்திற்குச் சென்றுன்; அங்கே அனைவராலும் நன்கு உபசரிக்கப் பெற்றுக் காதம்பரியைக் கண்டான்; மஹாச்வேதையுடன் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தான்; குதிரைமேலேறித் தனதிடத்திற்குப் பிரயாணமானுன்.

இந்நிலையில், கேயூரகன் ஓடோடியும்வந்து அவனை நோக்கி "ஐயா, தங்களது பத்திரலேகையைச் சிலநாட்கள் இங்கே இருந்துவருமாறு செய்யத் தேவியார் பெரிதும் வேண்டுகின்றனர்; அவளை அழைத்தற்கெனவே மதலேகை அனுப்பப்பெற்றுள்ளாள். அப்பால் சமுகத்திய திருவுள்ளப்படியே யாகுக" என்றுன்.

அதைக்கேட்ட சந்திராபீடன் அவனை நோக்கி "அங்ஙனமே ஆகுக; தேவியார் நினைப்பிற்குமாறுக என்ருல் எதுவுஞ்செய்ய இயலாது" என்றுகூறிப் பத்திரலேகையை அவர்களோடு அனுப்பிவிட்டுத் தன்னுடைய சேனைகளிருக்குமிடத்திற்கு வந்தான்.

அக்கால், அவன் தனது தந்தையாரிடமிருந்து கடிதங் கொண்டுவருபவனைக் கண்டான்; அவனை அழைத்து "அப்பா, என்னுடைய குடிகளும் பெற்றோர்களும் மந்திரி முதலாயினுரும் இனிது வாழ்ந்து வருகின்றுர்களா? நீ வந்த காரணம் யாது?" என்று வினவினுன்.

வினவலும், அவன் அருகில்வந்து வணங்கி "ஐயா, பட்டணத்தில் அனைவருஞ் சுகமாயிருக்கின்றனர்."

என்று உரைத்துத் தன்னிடமிருந்த இரண்டு கடிதங்களைக் கொடுத்தான். சந்திராபீடன் அவற்றை வாங்கிச் சிரசிலேதரித்துப் பின்னர்த் தனது விலாசம் எழுதியிருந்தவற்றைப் பிரித்துப் படித்தான். அவற்றில் 'இக்கடிதத்தைக் கண்டகாலமே இளவரசர் முதலாயினோர்க்கு நகரத்தை நோக்கித்திரும்பும பிரயாணகாலமாக இருத்தல் வேண்டும' என்பது எழுதப்பெற்றிருந்தது. இதே கருத்தடங்கிய வேறு இரண்டு கடிதங்கள் வைசம்பாயனனுக்கும் வந்திருந்தன.

சந்தையாரது உத்தரவை அறிந்த சந்திராபீடன் 'மஹாச்வேதை, காதம்பரி முதலாயினோரிடம் தெரிவித்து உத்தரவு பெற்றுக்கொள்ளாமலே ஊருக்குப் போகவேண்டிய அவசரம் நேர்ந்திருக்கிறதே; பத்திரலேகையுமல்லவா இச்சமயம் இங்கு இல்லாதிருக்கலாயிற்று' என்று எண்ணிச் சிறிது வருந்தினனாயினும் தந்தைசொல் மிக்க மந்திரம இல்லை எனபதை நனகு உணர்ந்துளானாதலின் சிறிதும் தாழ்த்தலாகாது என்று கருதி, குதிரையில்நின்று இறங்காமலேயே சமீபத்திருந்த வலாஹகன் மகன் மேகநாதன் என்பவனை நோக்கி இந்நேரம் கேயூரகன் பத்திரலேகையை அழைத்துக்கொண்டு பாதிவழி வந்திருக்கலாம அவனிடம் 'யான், தந்தையாரிடமிருந்து உடனே புறப்படுமாறு உத்தரவு வந்ததால் நேரில் உத்தரவு பெற்றுப்போக முடியாதுபோனதைக் கருதிப் பெரிதும் வருந்திப் போவதாகவும், எதிர்பாராது நேர்ந்த இக்குற்றத்தை மன்னித்தருளுமாறு பெரிதும் வேண்டிக்கொண்டதாகவும் காதம்பரியிடத்திலே தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டேன்' என்று கூறி அவனைத்

திருப்பி அனுப்பிவிடு. அவனைக்கண்டு இச்செய்தியைத்தெரிவித்ததும் சிறிதுங் காலந்தாழ்த்தாது நீ, பத்திரலேகையுடன் விரைந்து உஜ்ஜயினி வந்து சேருவாயாக" என்று கூறி அவனை அங்கேயே நிறுத்தி, வைசம்பாயனனை அழைத்து "அன்ப, நம்முடைய ஐயனமார்களிடமிருந்து வந்த உத்தரவுகளைத் தெரிந்தும் நாம் இனி இங்கே இருத்தல் அடாது இனி விரைவிலே நாம் நமது நகரத்திற்குப் புறப்படல் வேண்டும். ஆதலின், நீ, நம்முடைய சேனைகளைப் பயணப்படுத்திக்கொண்டு எவரும் வருந்தா வண்ணம் மெதுவாகப் பட்டணத்திற்கு வந்து சேருவாயாக. யான் முன்னே போகின்றேன்" என்று கூறிப் புறப்பட்டான்; வழியிலே பலவகையான காட்சிகளைக் கண்டுகளித்தான்; ஆண்டு ஓரிடத்திலே ஒரு காளி கோயிலிருக்கக் கண்டான்; அச்சமயமோ வெந்தாறிய பொன்னையொத்த அந்திக்காலமாயிருந்தது ஆதலின. அவன் அங்கேதங்கி மாலைக்கடன்களை முடித்துக் காளிகாதேவியைத் தரிசித்து அற்றை இரவை அங்கேயே கழித்தான். இவ்வாறாக ஆண்டாண்டு வழிகளிலுள்ள விசேஷங்களைக் கண்டுகளித்துச் சின்னாட்களிலே உஜ்ஜயினிக்கு வந்து சேர்ந்தான்.

இளவரசனது எதிர்பாராத வருகையினால் மகிழ்வெய்திய நகரமாந்தரனைவரும் பெரிதும் ஆரவாரத்துடன் அவனை வரவேற்றனர். அரசன் முதலாயினாரும் ஆனந்தக் கடலுள் ஆழ்ந்தனர். பின்னர்ச் சந்திராபீடன் தாய் தந்தையருக்கும், மந்திரியாருக்கும், மனோரமாதேவிக்கும் முறையே வந்தனைவழிபாடுகளைச் செய்து அவர்களால் ஆசிகூறப் பெற்றான்;

வைசம்பாயனன் சேனையிற் சுகமே இருப்பதாகவும் விரைவிலே நகரத்திற்கு வந்து சேருவான் என்றும் அவர்களிடத்திலே தெரிவித்து விடைபெற்றுத் தனது மாளிகைக்கு வந்தான்; பத்திரலேகையின் வரவை எதிர்பார்த்துக்கொண்டே நாட்களைக் கழித்தான்.

இங்ஙனமாக, ஒரு நாள் மேககாதன, பத்திரலேகையை அழைத்துவந்தான். சந்திராபீடன் அவர்களை இனிது வரவேற்றுப் பத்திரலேகையை நோக்கி "நங்காய், மஹாச்வேதை, காதம்பரி, மதலேகை, கேயூரகன், தமாலிகை முதலாயினர் சுகமாயிருக்கின்றனரா? நீ அங்கே எத்துணை நாட்களைக் கழித்தனை? காதம்பரி முதலாயினர் என்னிடம் அன்புள்ளவர்களாய் இருக்கின்றனரா?" என்று வினவினன்.

வினவலும், பத்திரலேகை, சந்திராபீடனை நோக்கி "ஐய, அங்கே அனைவருஞ் சுகமாயிருக்கின்றனர். தேவி முதலாயினர் தங்களிடத்திலே அளவு கடந்த அன்பு வாய்ந்தவர்களாயிருக்கின்றனர். காதம்பரி தேவியார் என்னையே தமது உயிரினும் அதிகமாகக் கருதினரென்றால் சமூகத்தைப்பற்றி எத்தகைக் கருத்துள்ளவராயிருப்பர் என்பதை ஏழையேன் சொல்லவும் வேண்டுமோ?" என்றனள்.

இவ்வாறு சில நாட்கள் செல்ல ஒரு நாள் அங்கே கேயூரகன் வந்தான். அவனால் சந்திராபீடன் மஹாச்வேதை, காதம்பரிதேவி முதலாயினரது நிலைமையை உணர்ந்தான்; 'யாது செய்வது?' என்று அறியவொண்ணாது கலங்கினன்; இச்சமயம் 'ஈண்டு

வைசம்பாயனன் இல்லாதது ஒரு பெருங் குறையே யாம்' என்று எண்ணினான்; சில நாட்கள் செல்லத் தனனுடைய சேனைகள் வருகின்றன என்பதை உணர்ந்தான்; 'இனித்தான் ஹேமகூடத்திற்குப் போகலாம்' என்று துணிந்து தந்தை முதலாயினாரிடத்திலே உத்தரவுபெற்றுத் தனது சேனைக்கு எதிர்முகமாகச் செல்ல எண்ணினான்.

அக்கால், கேயூரகன் சந்திராபீடனை நோக்கி "ஐயா, தேவரீரோ நிச்சயமாக ஹேமகூடத்திற்கு வர இருக்கிறீர்கள யான முன்னர்ச்சென்று தங்களது வருகையைத் தெரிவித்துச் சற்றே அவர்களைச் சந்தோஷமடையச் செய்வேன் தயைசெய்து உத்தரவளிப்பதோடு பத்திரலேகையையும் என்னுடன ஆண்டு வருமாறு பணித்தருளல் வேண்டும்" என்றான்

உடனே. இளவரசனும் 'அங்ஙனமே ஆகுக' என்று கூறி மேகநாதனை அழைத்து "நீ, பத்திரலேகையுடன் போவாயாக; யான விரைவிலே வைசம்பாயனனைப் பார்த்துவிட்டு உன்னைப் பின்தொடர்ந்து வருவேன்." என்று கூறியதோடு மீட்டுங் கேயூரகனை நோக்கி "அப்பா, தேவி முதலாயினருக்கு என்னுடைய உபசார மொழிகளைக் கூறுவாயாக அன்றியும் யான் வருங்கால் என்னை அழைத்துப்போக நீ பத்திரலேகையுடன் மஹாச்வேதையின் ஆச்சிரமத்திற்கு வரல்வேண்டும்' என்றும் கூறி அவர்களை அனுப்பினான்.

அப்பால், சந்திராபீடன், தனது விவாகத்தைக் குறித்துச் சுகநாதரிடம் பேசிக்கொண்டிருப்பவரும்,

தன்னிடத்திலே அளவுகடந்த அன்பை வைத்தவரும் ஆகிய தாராபீட தேவரிடஞ் சென்றான்; வைசம் பாயனனை எதிர்சென்று அழைத்துவருவதற்குப் போக உத்தரவு கேட்டுப்பெற்றான்; நகரை நோக்கி வந்துகொண்டிருக்கும் தனதுடையநால்வகைச்சேனைகளையும் கண்ணுற்றான்; வைசம்பாயனன் படையிலில்லாதிருப்பதை உணர்ந்தான்;

'இங்கே வைசம் பாயனனை
யான்கண் டிலன்மற் றெங்கிடத்தே
எங்கே காண்பேன் அவனைப்போல்
எனக்கிங் குற்ற துணையார்தான்
அங்கே நின்று போந்தேனே
அறிபா தகனே னானேனான்
எங்கே போவேன் எதுசெய்வேன்
இருந்தேன் இன்னும் இருந்தேனே.

என் ஆருயிரே என்மனமே
என்றேன் ஈதோர் அறியாமை
என் ஆருயிரும் என்மனமும்
எனக்கென் செய்த இவனைப்போல்
என் ஆருயிர்கொண் டிருப்பதினி
என்னும் எந்தை சுகநாதன்
என் ஆர்வம்சேர் அன்னையர்முன்
இவனை ஒழிந்தோ யான்செல்வேன்'

என்றுப் புலம்பினான்; அவன் அச்சோதப்பொய்கைக்கு நீராடிவரச் சென்றதையும், அங்கிருந்து திரும்பிவர மறுத்ததையும் ஏனையோர் கூறக்கேட்டான்; அதனைத் தனது எண்ணம் நிறைவேறுவதற்

கான ஒரு பெரிய சாதனமாகக் கருதினான்; ஆயினும், தன்னைவிட்டுச் சிறிதும் பிரிந்திருக்க மனந் துணியாத வைசம்பாயனனுக்கு இத்தகைய உணர்ச்சி உண்டாகுமாறு தன்னாலே ஏதேனும் தவறிழைக்கப் பெற்றதோ எனக்கவன்றான்; ஒருவகையாகத் தேறுதலடைந்து பட்டணத்திற்குத் திரும்பி வந்தான். வைசம்பாயனன் வராது தங்கியிருக்கும் செய்தியைத் தெரிவித்தான்.

அக்கால், தாராபீடன் தனது மகனும் இளவரசைப் பலவாறாக இகழ்ந்துரையாடி "இஃது உத்தம நண்பர்களது செய்கையாகாதே. நீ, எவ்வாறு வைசம்பாயனனை விட்டுவிட்டு வரலாம்? கூடிப்பிரியேல் என்பதை நீ அறியாயோ? நீ கனசம் நெல்லுடன் அறுப்புண்டு கிடக்கும் கழனிகளைக் கண்டறியாதவனோ? அந்த வந்தநாள் தோழரைவிட்டு அயல் துறக்கும் வஞ்சநெஞ்சன் என்று உலகினர் இனி உன்னை ஏசாரோ?" என்று இடித்துரைத்தனன்.

உடனே, சுகநாதர், அரசர்க்குச் சமாதானமாக அவரை நோக்கி, "அரசே, இளவரசனிடம் ஏதும் பிழையிலது. வைசம்பானனுடையவே அனைத்துப் பிழைகளும். அவனன்றோ இளவரசனது உத்தரவை மீறியவன்? அவனாலன்றோ குறித்த நாளில் சேனைகள் பிரயாணமாகவில்லை? மேலும்,

இரவியை இருள்எதிர் விரவினும்; வெண்மதி
இனிமை தரும்கதி ரினைவிட்டுப்
பரவிய வெம்மை படைப்பினும்; நல்லவர்
பழுதுரை மொழியினும்; வரைமேவும்

தரைமிகு பொறையது தவிரினும்; முதுதிரை
தருகடல் தரஅம ரர்க்காகும்
விரைதரும் அமுதது மைப்பினும்; இங்கிவன்
மேல்ஒரு குறைஉள தெல்ஆமோ.

இவன்நிலை மைக்கிவன் அறிவு தகைக்கிவன்
இயல்பு தனக்கொரு நிகர்உண்டோ
அவன் அறிவற்றவன் அவன்நிலை அற்றவன்
அவன் இயல்பற்றவன் அன்றோதான்
இவனை வெறுப்பதும் இவனை ஒறுப்பதும்
இவனை மறுப்பதும் இயல்போதான்
அவனை வெறுப்பதும் அவனை ஒறுப்பதும்
அவனை மறுப்பதும் ஆம்.

ஆதலின், அவனே, குற்றவாளியாவன். இவ்வாறிருந்தும இளவரசன் நெல்லிற்குஉமிஉண்டு நீர்க்கு நுரை உண்டு, புல்லிதழ் பூவிற்கு உண்டு என்றதை உணர்ந்துளானாகலின் அதற்குத்தகமீண்டுபோய் வைசம்பாயனனை அழைத்துவரத் துணிந்திருக்கிறான். இத்தகைய இளவரசைத் தாங்கள் இனியேனும் இழித்துரையாதொழிவீர்களாக" என்று கூறினார். எவ்வளவு கூறினும் என்? அரசர்க்குச சந்திராபீடனிடம் நல்ல எண்ணம் உதிக்கவில்லை

இங்ஙனமாகச் சந்திராபீடன், வைசம்பாயனன் வாரதகால வருத்தத்துள் ஆழ்ந்து கிடக்கும் மனோரமைக்கு ஆறுதலைக்கூறித் தன்னுடைய பெற்றோர்களிடம் வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வைசம்பாயனனை அழைத்துவருவதற்குச் செல்ல அவர்களிடம் உத்தரவுபெற்றான; அக்கால் உண்டான

பல்வகைப்பட்ட இடையூறுகளை விலக்கிக்கொண்டு புறப்பட்டான்; மாறிமாறி வருந்துன்பங்களைப் பொறுத்து, மாரிக்காலம் என்பதைச் சிறிதும் மதியாது பல நாட்களைச் செலவழித்துச் சென்றான்; வழியிலே வந்த மேகநாதனைச் சந்தித்தும் அவனாற் சிறிதும் வைசம்பாயனனைப்பற்றி அறிந்துகொள்ளக் கூடவில்லையாதலின் மிகவருந்தியவனாகி அச்சோதக் கரையை அடைந்தான்; தன்னுடைய பரிவாரங்களைப்பார்த்து "வைசம்பாயனன் என்னைக் காண வெட்கி ஒரு சமயம் ஒளிந்தாலும் ஒளியலாம்; ஆகவே, நீங்கள் இக் குளக்கரையைச் சுற்றிலும் வளைந்துகொள்ளுங்கள்" எனப் பணித்தான்; அவ்விடமெங்கும் தேடினான். வைசம்பாயனனை மாத்திரம் பார்க்கக்கூடவில்லை.

இங்ஙனமாகச் சிறிது நேரஞ்சென்றதும் சந்திராபீடன் மஹாச்வேதையின் ஆச்சிரமத்திற்குச் சென்றான்; மிகத்துக்கத்தோடும் தலைகவிழ்ந்து வருந்திக்கொண்டிருக்கும் மஹாச்வேதையைக் கண்டான்; காதம்பரிக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்ததோ என மயங்கினான்: தரளிகையாலே சமாதானஞ் செய்யப் பெற்றுப் பின்னர் மஹாச்வேதையால் வைசம்பாயனன் [illegible] தன்னிடத்திலே தவறி நடந்துகொண்ட [illegible] செய்கைக்கேற்பக் கிளியாமாறு அவளா[illegible] சபிக்கப்பெற்று அவன் இறந்ததையும் உணர்ந்தான்; 'பெரும்படையும் மன்னவரும் பிதாவும் அன்[illegible] என்ன செய்வார்கள்? அவர்களுக்கு யான[illegible] சொல்வேன்? நாங்கள் அனைவரும் உன[illegible]ர்ந்து வருவோம்'

என்றலறி விழுந்தழுதிங் கெவரோ காப்போர்
இவ்வுலகை அவ்வுலகை இனிநீ ஆளச்
சென்றனை இங் கறம்உண்டோ செங்கோல் உண்டோ
திருந்திய பேரருள் உண்டோ சீர்தான் உண்டோ
நன்றிஅறிவார் உண்டோ நன்றி உண்டோ
நடு உண்டோ பொறைஉண்டோ நல்லோர் உண்டோ
ஒன்றிய திண்திறல் உண்டோ உலகம் உண்டோ
உன்னைஒழிந் தொன்றுரையாய்.

என்று வாடினான். உடனே, அவனது நெஞ்சம் பிளவுற்றது. அவனதுயிரும் நீங்கியது. பாருங்கள்! உத்தமர்களது உண்மையான நட்பின் பெருமையை!! இஃதன்றோ அன்பார்ந்த நட்பினர்க்காம் அறிகுறியாவது!!! இதைப்பற்றியன்றோ சாவிற்சாதல் நோவின் நோதல்என்று ஒத்த அன்பினர்க்கு இலக்கணங் கூறுவாராயினர் நமது தண்டமிழ்ச்சான்றோர். இங்கு உணர்ச்சிதான் நட்பாங்கிழமைதரும் என்ற உறுதியுரை உய்த்துணரற்பாலது. இறுமளவும் இன்பறுவ இன்புற்று எழீஇ, அவரோடு துன்புறுவ துன்புறுக்கால் நட்டார்க்குநட்டார் மறுமையும் செயவது மூன்றுஉண்டோ?

இதனைப் பார்த்துக்கொண்டிருந்த தரளிகை, மஹாச்வேதையை விட்டுவிட்டுச் சந்திராபீடனது கீழேசாயத்தொடங்கின சரீரத்தைத் தாங்கிக்கொண்டாள்; "அம்மே, விரைந்து வாருங்கள் சந்திராபீடரது முகம் வேறுபடுகின்றது; அவரது தலைசாய்கின்றது; மூச்சையுங்காணேன்" என்றாள். அவற்றைக்கேட்ட மஹாச்வேதையும் ஓடிவந்தாள் பலவாறு புலம்பினாள்.

இந்நிலையில், சந்திராபீடனது வரவை அறிந்த காதம்பரி, கேயூரகன் முன்சென்று வழிகாட்டப் பத்திரலேகை, மதலேகை இவர்களுடன் மஹாச்வேதையின் ஆச்சிரமத்திற்கு வந்தாள்; அது,

வண்டரவம் அற்றமலர்ச் சோலை போல
மதிஉதயம் இல்லாத வானம் போலத்
தண்தரளம் இல்லாத ஆரம் போலத்
தாமரைப்போ தில்லாத தடாகம் போலப்

பொலிவற்று இருப்பதைக் கண்டுகருத்து அழிந்தாள்; சந்திராபீடனது உயிரற்ற உடலைக்கண்டாள்; பலபடியாகப் புலம்பினாள்; தோழியர் எவ்வளவு தேற்றியுந் தேறுதலைப் பெறாதவளாகிக் கதறினாள்.

அப்பொழுது, சந்திராபீடனது உடலினின்று சந்திரனுக்கொப்பான ஒளியோடு ஓர் உருவம் உயரக் கிளம்பியது; மஹாச்வேதையை நோக்கி

"வருகமக ளேஅஞ்சல் மேனாள் உன்னை
வாடாத வகைஉரைத்துப் புண்டரீகன்
ஒருதனுவைக் கொடுசென்றங் கமுதில் வைத்தேம்
உன்னுடனே கூடுதற்கு; இன் றிதுவும் ஒக்கும்
கருதில் இதுதானும்வே றல்ல காமே
காண்: இதுகா தம்பரிதன் கைப்போ தாகி
வரும்அமுதால் அழியாதிவ் உடலும் சாப
வலிதொலையும் அவ்அளவும் வைப்பதிங்கே."

என்று மொழிந்தது. அம்மொழியால் மஹாச்வேதை சிறிது தேறுதல் அடைந்தாள். காதம்பரியும் ஒருவகையாகத் தேறுதல் அடைந்து அவ்வுடலை இனிது காத்துவருகின்றாள்.

இந்நிலையில், பத்திரலேகை ஏதோ மதிமயக்கங் கொண்டவளைப்போல் ஓடி, இந்திராயுதத்தை இழுத்

துகொண்டு அச்சோதத்திலே வீழ்ந்தாள். சிறிது நேரத்திற்கெல்லாம் அப்பொய்கையினின்றும்

மருவும் ஒரு வற்கலையும் பாசிக் கொத்தார்
வார்சடையும் புரிநூலும் வயங்கச் சாபம்

ஒருவிவருகின்ற புண்டரீகனது நண்பராம் கபிஞ்சல முனிவர், தமது முன்னை உருவத்தோடு மேலே கிளம்பினார்; மஹாச்வேதையின் முன்னே தோன்றினார்; தாம் அன்று தமது தோழனது உடலோடு சந்திரமண்டலத்திற்குச் சென்றதையும், அங்கே தமது தோழனது உடலைக்கண்டதையும், அவனுக்குச் சந்திரனாக வானாலே வந்த சாபத்தையும், அச்சாபத்தின் பயனாகத் தமது தோழனே வைசம்பாயனனாக வந்தானென்பதையும், தமக்கு அங்கே நேர்ந்த சாபத்தையும், அச்சாபத்தின் பயனாகத்தாம் இந்திராயுதமாகிச் சந்திராபீடனுக்கு வாகனமாயிருந்ததையும், பிறவற்றையும் அவட்கு விஸ்தாரமாகக் கூறினார்; சந்திராபீட வைசம்பாயனர்களுடைய பின்னைச் செய்திகளை அறிந்துகொள்வதற்காகச் சுவேதகேது முனிவரிருக்குமிடத்திற்குச் சென்றார். இறக, சந்திராபீடன் உயிர்துறந்ததைத் தூதுவரால் அறிந்த தாராபீடன்,

'செங்கயற்கண் நீர்ததும்பச் சிந்தை சோரச்
செய்யபதம் தடுமாறச் சென்று வாய்விட்டு
எங்கள்வழி அரசுஎங்கே எங்கே சொல்லீர்'
'மின்னுமல் இடிஇடித்த தென்னே என்னே
வேந்தர்குல மணிவிளக்கே வேந்தரேறே
என்னுயிர்க் கொருதுணையே என்றன் வாழ்வே
என்உயிரே என்அரசே எதிர்ந்த போரில்
பின்னாணி முன்அணுகும் அவனே சந்த்ரா
பீடன் எனும் திருநாமம்பெற்ற கோவே' என்று

வாய்விட்டுக் கதறிவாடும் விலாசவதியை நோக்கி

'இலங்கிழை, நீ கலங்கல்மின் சந்திரா பீடன்
இருந்தனனேல் இருப்பேம்' என்று கூறித் தேற்றிச் சுகநாசர் முதலாயினருடன் அவ்விடம் வந்து, அவனது உடல் காப்பாற்றப்பெற்று வருவதையும், அவன் மீண்டும் உயிர்த்தெழுவான் என்பதையும் உணர்ந்து, தங்களை முறைப்படிவணங்கி ஆசிமொழியைப் பெற்ற காதம்பரியினிடத் திலே அவ்வுடலை ஒப்புவித்துத் தனியே ஓரிடத்திலே தங்கியிருந்தனர். சுகநாசரால் கூறப் படும் பல இதிகாச புராணங்களாலும், தங்களாலே அன்று காணப்பட்ட கனவின் பொருளாலும் அறிவுறுத்தப் பெற்றுத் தேறுதலடைந்த தாராபீடன், சந்திராபீடன் உயிர்த்தெழுமாறு அருள்புரிய அறக் கடவுளை வேண்டித் தவஞ்செய்யத் தொடங்கினன்.

இவ்வாறாக, சந்திராபீடன், வேத்திரவதீ என்ற நதியினாற் சூழப்பெற்ற விதிசை என்னும் நகரத்திலிருந்து மாளவம் என்னும் ஒருதேசத்தை ஆளும் பேறுபெற்று

கண்இணையில் பூமகளும் தோளிணையில் பார்மகளும் கலைதேர் நாவில்
பண்இணைசொல் பாமகளும் பரிந்துபரிந் தனவரதம் பயின்று வாழ
விண்உலகில் தேவர்எலாம் ஓர்உருவாம் திருநெடுமால் விசுவ ரூபம்
மண்உலகில்பெருந்தவத்தால்வந்ததெனவந்துதித்தமன்னர்கோமான்

எனச்சிறப்பிக்குமாறு பிறந்துவளர்ந்து சூத்திரகன் என்னும் பெயரையுடையவனாகி அதனை ஆண்டுவருகிறான்.

இவை இங்ஙனமாக, முன்னே அச்சோதக்கரையினருகிலே தங்கியிருந்த சந்திராபீடனது சேனையினின்று பிரிந்து, அச்சோதக்கரையை அடைந்து,

'பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு'

என்றபடி

முன்னைவினையின் தொடர்பால் மஹாச்வேதையை நெருங்கி, அவளாலே சபிக்கப்பெற்று இறந்த வைசம்பாயனன், அச்சாபத்தின் பயனாகத் தண்டகாரணியத்திலுள்ள பம்பை என்னும் பொய்கைக் கரையிலிருந்த ஓர் இலவமரத்திலே வசித்துவந்த கிளியின்வயிற்றிலே வந்து பிறந்தான்;

வலைஎ டுத்துமு டுக்கு வார்பல வாவ லைந்துநெ ருக்குவார்
சிலையி னைச்சிறு நாண்எ றிந்து சினத்து வாளிதி ருத்துவார்
இலைக ளுக்குள்ஒ ளித்தடங்கிஇ ருந்துபாயம் இயற்றுவார்
கலைது டைத்துமு கந்துமீ தெதிர் தாவு நாய்களை ஏவுவார்

ஆகிய வேடர்களுக்குத் தப்பி

பவக்கடல் கடக்கும் பாலமாய் ஆசைப்
படர்கொடிக் காடெறி மழுவாய்ச்
தவக்கடல் தனக்கோர் சந்திரன் ஆகிச்
சாந்ததை தங்கிவாழ் இடம்ஆய்க்
கவர்த்தள விடுதற் கருகியே பெருகுங்
கலைகளுக் கொருகரைக் கல்லாய்
எவர்க்கும் ஆதபன்ஆய் விளங்கும்

ஜாபாலி முனிவரது புத்திராகிய ஹாரீதன் என்பவரால் காப்பாற்றப்பெற்று, அம் மாமுனிவர் வீற்றிருக்கும் இடத்திற்குக் கொண்டுபோகப்பட்டான். அம்முனிவர் ஆண்டுக் குழுமியிருக்கும் பிற முனிவர்களது வேண்டுகோளின்மேல் அக்கினிபுருவோடிருக்கும் வைசம்பாயனனது முன்னை வரலாற்றை அவர்களுக்குக் கூறினார். அதனைக்கேட்ட வைசம்பாயனன் தனது முற்பிறப் புணர்ச்சியைப்பெற்றான்; அவர்களாலே அடக்கி ஆளப்பட்டு அங்கேயே வாழ்ந்து வருகிறான்.

இந்நிலையிலே, ஒருநாள் அவன், தனது முதற்பிறப்பின் நண்பனான கபிஞ்சலனால் தன்னுடைய பெற்றோர்

களின் செய்திகளையும், தனது தகப்பனார் தன்னை இவ் இழிந்தபிறப்பினின்று விடுவிக்க முயன்றுவருவதையும் அறிந்தான். பிறகு, அவனாலும் முனிவர்களாலும் விடப்பெற்றுத் தன் மனம்போன வழியிலே தந்தையாரது கட்டளையைமீறி நடக்கத்தொடங்கினான். அக்கால் தனக்கு முதற்பிறப்பிலே தாயாகியவளும், இப்பிறப்பிலே தன்னை அடக்கிஆளும் பொருட்டுத் தனது தந்தையாரால் அனுப்பப்பெற்றவளும், பறைக்குலத்தவளுமான ஒரு மாதங்கமாதினால் அவளுடைய வேலைக்காரர்களைக் கொண்டு பிடிக்கப்பட்டாள்;

'வந்தனை மகனே நன்றுன் மனக்கருத் தொழிப்பல் என்று
கந்தவன் பச்சை வாரால் கட்டிய கூட்ட டடைத்துச்
சிந்தனை செய்யல் முன்போல் சிந்தனை செய்யல்' என்று

அம்மாதினால் கற்பிக்கப்பட்டான்; தனக்கு நேர்ந்த இன்னல்களுக்குப் பெரிதும் இரங்கினான்; அவர்களால் அளிக்கப்பெறும் காய் முதலாயவற்றைத் தின்று பாலை அருந்தி உயிர்வாழ்ந்து வருகிறான். இந்நிலையில், ஒருநாள் திடீரென அவன் அடைக்கப்பட்டிருந்த கூடு பொன்னாக மாறியது. அவன் முற்பிறப்பிலே தனக்குச் சந்திராபீடன் என்னும பெயரோடு நண்பனாயிருந்த சூத்திரகன் சபைக்கு அன்றே அம் மாதங்கமாதின் உத்தரவால் ஒரு கிழவனாற்கொண்டுபோகப்பட்டான்; கிளிவடிவோடிருந்த வைசம்பாயனன், அவன் கேட்கத் தனனுடைய முன்னை வரலாறுகளைக் கூறினான்.

கூறலும, சூத்திரகன், மாதங்கமாதாக வந்திருந்த மஹாலட்சுமியை அச்சபைக்கு வரவழைத்தான். அவளும் விரைவில் ஆஸ்தானமண்டபத்தை அடைந்து, தன்னுடையவும் கிளியுடையவும் அரசனுடையவுமாகியமுன்னைவரலாறுகளை முற்றத்தெரிவித்து

மீட்டும் மன்னனை நோக்கி, "அப்பா, பெற்ற பெரும் பயனைச் சிறிதாக்கிப் பெருத சிறுபயனுக்கங்காக்கும் பேதைக் குணமவாய்ந்தது இம்மக்கட்பண்பு ஆதலின் நீங்களிருவரும் இனிச் சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினையுடையவாகிய ஆக்கமநிறைந்த இவ்வுடல்களை விட்டுவிட்டு உங்களுடைய இஷ்டப்படி இருந்து இன்பமுறுவீர்களாக. அன்றியும்,

இங்கிவன் மாதா யானே; எண்ணிய திருவும் யானே;
இங்கொரு பறைச்சி ஆகி இடும்பைசெய் வித்தேன் யானே;
இங்கினி உங்கள் சாப இறுதி; மேல் உங்கட் கின்பம்
இங்கினிச் செய்வதே" என்றியம்பி அம்பரத்தில் ஆனாள்.

அப்பால், சூத்திரகன் தன்னுடைய முன்னை வரலாறுகளை உன்னியவாறே சிறிதுநேரம் அசைவற்றிருக்க, அவனது உயிர் அந்த உடலைநீத்துத் தனது முன்னையதாகிய சந்திராபீடனது உடலிலே புகுந்தது. உடனே காதம்பரியினாற் காப்பாற்றப் பெற்றுவருகிற சந்திராபீடன் உறங்குவது போலுஞ்சாக்காடேஉறங்கி, விழிப்பது போலும் பிறப்பு என்ற தேவர் குறளைத் தேவியார்க்குரைப்பவனைப்போல எழுந்தான்; காதம்பரி தேவியாரது கழுத்தைக் கட்டிக்கொண்டான். அக்கால், காதம்பரி பெரிதும் நாணங்கொண்டு அஞ்சி நிற்க, சந்திராபீடன் அவளை அருகழைத்துத்தேற்றித் தனது வரலாற்றைக் கூறியதோடு அவளது விருப்பத்திற்கிணங்கப் பத்திரலேகையே உரோகிணிதேவி என்றும் கூறினன. வைசம்பாயனனும் புண்டரீகனாகமாறிக் கபிஞ்சலனது கைப்பிடியோடு ஆகாயத்தினின்றும் இறங்கினன். இச்செய்தியைக் காதம்பரி மஹாசுவேதைக்கு மொழிந்து மகிழ்வித்தாள். அனைவரும் ஒருவரையொருவர் கட்டித்தழுவிக் களித்தனர்.

இச்செய்தி உடனே தாராபீடன் முதலாயினார்க்குத் தெரிவிக்கப்பட்டது. அவர்களனைவரும் வந்து சந்திராபீடன் முதலாயினாரைக்கண்டு மகிழ்ந்தனர். அக்கால கபிஞ்சலமுனிவர், சுகநாதரை நோக்கி "ஐயன்மீர், 'புண்டரீகனது சரீரத்தோடியைக்குமிவனே வைசம்பாயனன; நீவிர் இதிற் சிறிதும் ஐயப்படல் வேண்டா; யாம் உமது பிள்ளையாக இதுவரையில் இவனை வளர்த்துவந்தோம்; இவனை வைசம்பாயனனாக அங்கீகரித்துக் கொள்வீர்களாக; ஏனையசெய்திகளை நீவிரும் நேரிலே அறிவீர்' இவை இவரது தந்தையாராகிய சுவேதகேது முனிவருடைய வார்த்தைகளாம்" என்றுகூறினர். அதனாற் சுகநாதர் முதலாயினாருக்கு முன்னையிலும் பன்மடங்கு மகிழ்ச்சியுண்டாயது. அச்சமயம், அங்குள்ளாரிடத்திலிருந்த துக்கமானது தூயஞானச் சுடர்விளக்குத் தோன்றத்தோறு நில்லாத மாயையெனவும், அறத்தனெதிர் வனதீவினை மண்டிலம் எனவும் மறைந்தது.

இங்கே இவ்வாறாக, கேயூரகனாற் செய்திகளனைத்தையும் உணர்ந்த சித்திரரதன், ஹம்ஸன் என்ற இருவரும் முறையே தத்தம் மனைவிகளாகிய மதிரை, கௌரி என்பவர்களுடனும், பிறசுற்றவின் முறையார்களுடனும் புறப்பட்டு மறுநாட் காலையிலே மஹாச்வேதையின் ஆச்சிரமத்திற்கு வந்தனர். ஒருவரை ஒருவர் அறிந்துகொண்டு க்ஷேமம் விசாரித்தனர். அப்பால், சித்திரரதன், தாராபீடனை நோக்கி, "அரசே, விவாக மங்கலத்தை இனிது நிறைவேற்ற நம்பதிக்குச் செல்வோம்" என வேண்டினன். வேண்டலும், தாராபீடன், சித்திரரதனை நோக்கி "ஐய,